வாக்யங்களைச் சேர்த்து எல்லாரும் எக்காலத்திலும் அநுஸந்திக்கும்படி ஒருமந்த்ரமாக்கி அருள்புரிந்தான். அதுவே த்வயமெனப்படுகிறது. த்வயம்—இரண்டு. இரண்டுபாகமாயிருந்து, முதற்பாகம் உபாயத்தையும் இரண்டாம்பாகம் பலனையும் வெளியிடுவதால் அதற்கு இப்பெயர் வந்தது. இப்பிரபந்தம் அம்மந்த்ரத்தின் அர்த்தத்தைச் சுருக்கி வெளியிடுதலால் த்வயச்சுருக்கு எனப் பெயர்பூண்டது.

இதில் முதற்பாசுரத்தில் த்வயத்தின் 10 அர்த்தங்களைக் கூறப் போவதாகக் கூறி, முறையே (1) ஸ்ரீசப்தம் (2) அதன்மீதுள்ள 'மதுப்' என்னும் விகுதி (3) நாராயணசப்தம் (4) உரணசப்தம் (5) சரணசப்தம் (6) ப்ர என்னும் உபஸர்க்கத்துடன் கூடிய பத் என்னும் வினைப்பகுதி (7) அதிலுள்ள தன்மையுருபு (8) பிற்பகுதியில் ஸ்ரீமந்நாராயணசப்தம் (9) அதன் மேலுள்ள நான்காம்வேற்றுமையுருபு (10) நம: சப்தம் இவற்றின் பொருளை அருளி, இங்ஙனே கூறிய பத்து அர்த்தங்களையும் ஒரு பாசுரத்தில் சேர்த்துக்கூறி முடித்தருள்கிறார் ஸ்ரீதேசிகன்.

---

## சரமசுலோகச்சுருக்கு

போர்க்களத்தில் கண்ணன் அர்ஜுனனுக்குக் கீதையை உபதேசித்து முடிவில் சரமசுலோகத்தால் சரணாகதியை வெளியிட்டான். கீதையில் முக்கியபாகமாய், ரஹஸ்யங்கள் மூன்றில் ஒன்றான சரமசுலோகத்தின் அர்த்தத்தைச் சுருக்கி வெளியிடுவதால் இப் பிரபந்தம் இப் பெயர் கொண்டது.

இதனுள் முதற்பாசுரத்தில் சரமசுலோகத்தின் முழுத்தாத்பர்யத்தையும் அருளிச்செய்து, பிறகு 10-பாசுரங்களால் முறையே, (1) ஸர்வதர்மாந் பரித்யஜ்ய (2) மாம் (3) ஏகம் (4) சரணம் (5) வ்ரஜ (6) அஹம் (7) த்வா (8) ஸர்வபாபேப்ய: (9) மோக்ஷயிஷ்யாமி (10) மாசுச: என்னும் பாகங்களுக்கு வ்யாக்கியானம்செய்தருளுகிறார் நம் தேசிகன்.

---

## கீதார்த்தசங்கிரகம்

கண்ணன் அர்ஜுனன்தேரில் பாகனாய்ப் போர்க்களத்து நின்றான். அர்ஜுனன் கையில் வில்லையும் அம்பையும் எடுத்தான்; தன் பந்துவர்க்கமெல்லாம் தனக்குப் பகையாய்நிற்பதைக் கண்டான்; அவர்களை எதிர்த்துப் போர்செய்ய மனங்கொள்ளவில்லை. தகாத விஷயத்தில் அன்பும் இரக்கமும் அவனுள்ளத்துப் பெருகின. தர்மம்,

அதர்மம் ஆகியவற்றைப் பற்றிய அறிவில்லாது கலங்கினன். கண்ணனைச் சரணமடைந்தான். அப்போது கண்ணன் அவனைத் தேற்றிப் போர்செய்ய ஊக்கிய சுலோகங்களே பகவத்கீதையாய்த் திருவவதரித்தன.

18 அத்யாயங்கொண்ட இந்தக் கீதையின் ஒவ்வொரு அத்யாயத்தின் உயிர்நிலையாயுள்ள ஸாராம்சத்தையும் ஒவ்வொரு அழகிய சிறு சுலோகத்தில் பொதிந்து ஆளவந்தார் கீதார்த்தஸங்க்ரஹம் என்னும் க்ரந்தத்தை அருளிச்செய்தார். (இதற்கு நம் தேசிகன் கீதார்த்தஸங்க்ரஹரக்ஷை என்னும் ஓர் உரையும் இட்டருளியிருக்கிறார்.) இந்த ஆளவந்தார் ஸ்ரீஸூக்தியின் ஒவ்வொரு சுலோகத்தையும் ஒவ்வொரு பாசுரமாகத் தமிழில் மொழிபெயர்த்து இப்பிரபந்தம் அருளிச்செய்யப்பட்டது.

---

[இனித் திருவயிந்திரபுரம் தெய்வநாயகன்மீது சில ப்ரபந்தங்களைப் பாடியருளத் திருவுள்ளங்கொண்டு மும்மணிக்கோவை, பந்து, கழல், அம்மானை, ஊசல், ஏசல், நவமணிமாலை என்னும் ஏழு ப்ரபந்தங்களைப் பாடியருளினர். அவற்றுள் மும்மணிக்கோவை ப்ரபந்தலக்ஷணத்தின்படி முப்பதுபாசுரங்களடங்கியதாக இருந்தே தீரவேண்டும். இப்போது இதில் பத்துப் பாசுரங்களே அநுஸந்தானத்தில் வருகின்றன. மற்றுமுள்ள இருபதுபாசுரங்களும், பந்து முதலிய ஐந்து ப்ரபந்தங்களும் நம் தீவினையின் பயனாய் அனுஸந்தானபரம்பரையில் வராமல் மறைந்துவிட்டதற்கு மிக வருந்துகிறோம்.]

## மும்மணிக்கோவை

அகவல், வெண்பா, கட்டளைக்கலித்துறை என்ற மூன்று பாக்களால் இப்பிரபந்தம் அமைக்கப்பட்டு மூவகைமணிகளால் அமைந்த ஹாரம்போலிருத்தலின் இதற்கு இப்பெயர் வந்தது.

இப்பிரபந்தத்தில் முதலில் பிராட்டியின் பெருமையையும், ஸ்ரீசப்தத்தின் ஆறுபொருள்களையும் பேசி, தெய்வநாயகனுடைய திருக்கல்யாணகுணங்களைப் புகழ்ந்து, எல்லாப் பொருளாயும் எல்லாப் பந்துவாயும் இருப்பவன் அவனே என்று காரணத்துடன் கூறி, அவனடிகளை உபாயமாகக்கொண்டவர் அவனுக்குச் சமமாகின்றாரென்று வெளியிடுகிறார் நம் தேசிகன்.

இதில் தெய்வநாயகன்மீது ஸ்வாமிக்குள்ள அளவிலாக்காதலால் ஆழ்வார்களைப்போலத் தாமும் அவனை நாயகனாகவும், தம்மை நாயகியாகவும் தோழியாகவும் கொண்டு பாடிய சில பாசுரங்கள் நம் மனத்தைக் கவர்கின்றன.

---

## நவமணிமாலை

இந்த ப்ரபந்தத்தை நவரத்னமாலை யென்றும் வழங்குவதுண்டு. ஆனால் தமிழில் ப்ரபந்தலக்ஷணத்தின்படியும், ஸ்வாமி தாமே பெயரிட்டுக்கொடுத்ததன்படியும் நவமணிமாலை என்ற பெயர் வழங்குவதே முறையாகும். வெண்பா முதலிய பாக்களில் ஒன்பது அமையப்பெற்றதாகையால் இதற்கு நவமணிமாலையெனப் பெயர் வந்தது.

இப்பிரபந்தத்தில் முதலில் திருவஹீந்திரபுரத்து எம்பெருமானுடைய திருவடிகளின் பெருமையைப் பேசி, பின் அவன் பத்து அவதாரங்களெடுத்த வரலாற்றையும், ப்ரஹ்மா கருடன் திருவநந்தாழ்வான் பூமிதேவி இவர்களுக்கு அருள்புரிய அவர்கள் தீர்த்தவுருக்கொண்டு அங்கிருக்கும் வரலாற்றையும் கூறி, மாசிமாதத்தில் தெய்வநாயகன் கடற்கரைக்கு எழுந்தருளித் திருமணத்தோப்பில் கண்டருளும் உத்ஸவத்தைப் புகழ்ந்து, அவ்வெம்பெருமானுடைய வடிவழகையும், அதில் ஈடுபட்டு மறவாதவர்க்கு ஸம்ஸாரபந்தம் நீங்கும்வண்ணத்தையும் வெளியிட்டு, தம்முடைய அந்திய காலத்தில் தமக்கு அபயப்ரதானம்செய்யுமாறு தெய்வநாயகனை வேண்டிக்கொண்டு, தெய்வநாயகன் தன்னைப் பாடும்படி தம்மை நியமித்ததற்கிணங்கத் தாம் அவன்மீது வடமொழியில் இரண்டும், தமிழில் ஏழுமாக ஒன்பது ப்ரபந்தங்களைப் பாடியதையும் மொழிந்து தலைக்கட்டுகிறார்தேசிகன்.

................................

## பிரபந்தசாரம்

தேசிகன், நாலாயிரதிவ்யப்ரபந்தத்தின்மீது தமக்குள் ஈடுபாட்டின் மிகுதியால் இப் பிரபந்தத்தில் ஆழ்வார்கள் அவதரித்த திவ்யஸ்தலம், மாஸம், திருநக்ஷத்ரம், அவர்கள்பெருமை, அருளிச்செய்த ப்ரபந்தங்களின் பெயர், அவற்றின் பாசுர எண், அப்பிரபந்தங்களின் உயிர்நிலையான ஸாரார்த்தம் இவற்றை வெளியிட்டு, தம்முடைய அநுஸந்தானத்திற்காக அந்தப் பிரபந்தங்களைத் தமக்கு அருள்செய்யுமாறு அந்தந்த ஆழ்வார்களைப் பிரார்த்தித்து, கடைசியில் 2-பாசுரங்களில் ஆழ்வார்கள்திருநாமத்தையும் அவர்கள் அருளிச்செய்த பாசுர எண்களையும் கூறி, ஒரு பாசுரத்தில் ஒரே கோஷ்டியாக அவர்களை அநுபவித்து, அவர்களின் ப்ரபந்தமே தமக்கு உஜ்ஜீவிக்க ஸாதநமென்று மொழிந்து, தமிழ்மறையோன் என்று தம்மைப் பெருமையுடன் பேசிக்கொண்டு, இந்த ப்ரபந்தஸாரத்தை அநுஸந்திப்பவருக்கு எம்பெருமான்கருணையால் ஸகலக்ஷேமமுமுண்டாமென்று முடித்தருள்கிறார். ஆழ்வார்களருளிய ப்ரபந்தங்களின் ஸாரமான பொருளை இதில் சிறிய வாக்கியத்தில் அடக்கிக்கூறியபடியால் இதற்கு இப்பெயர் வந்தது.

ஒரு வேண்டுகோள்

ஸந்நிதியிலும் திருமாளிகையிலும் திவ்யப்ரபந்தத்தை ஸேவிக்கும்போது அந்தந்த ப்ரபந்தத்தின் தனியனை அநுஸந்தித்தவுடன் அந்தந்த ஆழ்வார் விஷயமாய் இப் ப்ரபந்தத்தில் தேசிகன் அருளிய பாசுரத்தையும் தனியனாக அநுஸந்திப்பது மிகவும் உசிதமாகும். புதியதாய் ஒரு வழக்கத்தைக் கைக்கொள்ளச் சிலர் கூசக்கூடும். பல புதிய சிறந்த வழக்கங்கள் கைக்கொள்ளப்பட்டிருப்பதையும் ஔசித்யத்தையும் கருதி இதையும் கொள்ளலாம். பெரியோர் ஆராய்ந்து நிர்ணயிக்க.

## ஆஹாரநியமம்

ஆஹாரத்தில் நாம் கடைப்பிடிக்கவேண்டிய முக்கியமான நியமங்களைக் கூறுவதால் இப்ப்ரபந்தம் இப்பெயர்படைத்தது. ஆஹாரம் சுத்தமாயில்லாவிட்டால் மனம் தெளிவடைவதில்லை. மனந்தெளியாதவன் எந்த நற்காரியத்தையும் செய்ய உரியனாகமாட்டான். இப்ப்ரபந்தத்தில், முனிவர் சாஸ்த்ரங்களில் கூறிய முறையைத் தழுவி நம்மால் உண்ணத்தகாத பதார்த்தங்களை எடுத்துக்காட்டி, பிறகு உண்ணத்தக்க பதார்த்தங்களையும் வெளியிடுகிறார் ஸ்ரீதேசிகன்.

## ப்ரபந்தார்த்தஸங்க்ரஹம் முற்றிற்று

### பிள்ளையந்தாதி

ஸ்ரீதேசிகன்திருக்குமாரரான நயினாராசாரியர், ஸ்ரீதேசிகன்திருவடிவாரத்திலேயே ஸகலார்த்தங்களையும் பெற்றுத் தெளிந்தவர். அவர் ஸ்ரீதேசிகன்மீது பிள்ளையந்தாதியென்னும் ப்ரபந்தத்தைப் பாடியருளினார். தாப்புற்பிள்ளையைப்பற்றிப் பாடிய அந்தாதியாதலின் இது பிள்ளையந்தாதி எனப் பெயர்பூண்டது. இதில் ஸ்ரீதேசிகன்பெருமை நன்கு விளக்கப்பட்டுள்ளது.

இதில் அடங்கிய ஸாரமான விஷயங்களாவன:—

"தேசிகன்புகழைப் பாடினாலன்றி உஜ்ஜீவிக்கமுடியாது. அவர் ஆராய்ந்து கண்ட ஸித்தாந்தம் உஜ்ஜீவிக்க ஸாதனமாகும். திருவேங்கடமுடையானே தேசிகனாக அவதரித்தான். தேசிகன்குணங்களைப் பாடி, அவரை மனத்து இருத்தினால் பாபங்கள் பறந்துபோம். அவரைப்பற்றினால் ஸகலநற்குணங்களுமுண்டாகும். அவரது அருளன்றி உபாயமில்லை" என்பனவாம். இங்ஙனே பலவிஷயங்களைக் கூறி, திருமந்த்ரத்திற் கூறிய நிஷ்டையையும், கபடமற்ற பக்தியையும் தமக்கு அருளவேண்டுமென்று வேண்டி, ஸ்வாமிதிருமேனி பல்லாண்டு வாழும்படி வாழ்த்தி, இப்ப்ரபந்தத்தை அநுஸந்திப்பவர் தம்முடியில் ஸ்ரீதேசிகன்திருவடிகள் விளங்கப் பெறுவரென்று பலன் கூறித் தலைக்கட்டுகிறார்.

ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேசிகாய நம:

# பிரபந்த அட்டவணை.

## பின் கிடைத்த சிறந்த பாடங்கள்

| பக்கம் | பாசுர எண் | வரி | முன் இருந்த படி | பின் கிடைத்த படி |
|---|---|---|---|---|
| 5 | 23 | 1 | செய்தடைந்த | செய்தடைத்த |
| 6 | 25 | 1 | யானென்பதுமன்றி | யானென்பதுமின்றி |
| 11 | 10 | 4 | நாமடியோமென்று | நாமடியோமெனும் |
| 15 | 35 | 1 | ஓதுமிரண்டை யிசைந்து | ஓதுமிரண்டை யிசைத்து |
| 17 | 41 | 3 | வாள்மறைவாக | வாளுறையாக |
| 18 | 44 | 1,2 | தனுவுயர்த்த | தனுவினுய்த்த |
| 20 | 51 | 1 | உணர்ந்தன | உதைந்தன |
| 20 | 51 | 3 | தடவுமளவிலுரலூடு | தடவுமளவிலுரலோடு |
| ,, | ,, | 15 | தொடர்ந்தன | துரந்தன |

---

## ஒரு விண்ணப்பம்.

இப்பதிப்பில் ஆறுவதாகவுள்ள பிரபந்தத்திற்குப் பழைய வழக்கையொட்டி 'அத்திகிரிமான்மியம்' என்று தலைப்புக் கொடுக்கப்பட்டது. இப்பால் செய்த ஆராய்ச்சியால் ஸ்ரீதேசிகன் இப் பிரபந்தத்திற்கு இட்ட திருநாமம் **'மெய்விரதமான்மியம்'** என்று தெரியவருகிறது. இது இப் பிரபந்தத்தின் 2, 28, 29, முதலிய பாசுரங்களிலிருந்தும் இதன் மூலரஹஸ்யத்திலிருந்தும் விளங்கும். ஆதலின் இப்பிரபந்தத்தின் தலைப்புக்களை **'மெய்விரதமான்மியம்'** என்று மாற்றிக்கொள்ளவேண்டுமெனத் தோன்றுகிறது.

    

ஸ்ரீ:

# நாலாயிரத் தனியன்

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

---

## பொதுத் தனியன்

ராமாநுஜ தயாபாத்ரம் ஜ்ஞாநவைராக்ய பூஷணம் |
ஸ்ரீமத்வேங்கடநாதார்யம் வந்தே வேதாந்ததேசிகம் || 1

லக்ஷ்மீநாத ஸமாரம்பாம் நாதயாமுந மத்யமாம் |
அஸ்மதாசார்ய பர்யந்தாம் வந்தே குருபரம்பராம் || 2

யோ நித்யமச்யுத பதாம்புஜ யுக்மருக்ம-
வ்யாமோஹதஸ் ததிதராணி த்ருணாய மேநே |
அஸ்மத்குரோர் பகவதோஸ்ய தயைகஸிந்தோ:
ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே || 3

மாதா பிதா யுவதயஸ் தநயா விபூதி:
ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம் |
ஆத்யஸ்ய ந: குலபதேர் வகுளாபிராமம்
ஸ்ரீமத் ததங்க்ரியுகளம் ப்ரணமாமி மூர்த்நா || 4

பூதம் ஸரஸ்ச மஹதாஹ்வய பட்டநாத-
ஸ்ரீபக்திஸார குலசேகர யோகிவாஹாந் |
பக்தாங்க்ரிரேணு பரகால யதீந்த்ர மிஶ்ராந்
ஸ்ரீமத்பராங்குச முநிம் ப்ரணதோஸ்மி நித்யம் || 5

## முதலாயிரம்

### பெரியாழ்வார்திருமொழி

𑌗𑍁𑌰𑍁𑌮𑍁𑌖𑌮𑌨𑌧𑍀𑌤𑍍𑌯 𑌪𑍍𑌰𑌾𑌹 𑌵𑍇𑌦𑌾𑌨𑌶𑍇𑌷𑌾𑌨𑍍
𑌨𑌰𑌪𑌤𑌿𑌪𑌰𑌿𑌕𑍍𑌲𑍢𑌪𑍍𑌤𑌂 𑌶𑍁𑌲𑍍𑌕𑌮𑌾𑌦𑌾𑌤𑍁𑌕𑌾𑌮𑌃 ।
𑌶𑍍𑌵𑌶𑍁𑌰𑌮𑌮𑌰𑌵𑌨𑍍𑌦𑍍𑌯𑌂 𑌰𑌙𑍍𑌗𑌨𑌾𑌥𑌸𑍍𑌯 𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌤𑍍
𑌦𑍍𑌵𑌿𑌜𑌕𑍁𑌲𑌤𑌿𑌲𑌕𑌂 𑌤𑌂 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌚𑌿𑌤𑍍𑌤𑌂 𑌨𑌮𑌾𑌮𑌿 ॥

'மின்னார்தடமதிள்சூழ் வில்லிபுத்தூ'ரென்றொருகால்
சொன்னார்கழற்கமலஞ்சூடினோம்,—'முன்னாள் -
கிழியறுத்தா'னென்றுரைத்தோம் கீழ்மையினிச்சேரும்-
வழியறுத்தோம், நெஞ்சமே!வந்து. 2

பாண்டியன்கொண்டாடப் 'பட்டர்பிரான்வந்தா'னென்று
ஈண்டியசங்கமெடுத்தூத—,வேண்டிய -
வேதங்களோதி விரைந்துகிழியறுத்தான்
பாதங்கள்யாமுடையபற்று. 3

### திருப்பாவை

𑌨𑍀𑌳𑌾𑌤𑍁𑌙𑍍𑌗𑌸𑍍𑌤𑌨𑌗𑌿𑌰𑌿𑌤𑌟𑍀𑌸𑍁𑌪𑍍𑌤𑌮𑍁𑌦𑍍𑌬𑍋𑌧𑍍𑌯 𑌕𑍃𑌷𑍍𑌣𑌂
𑌪𑌾𑌰𑌾𑌰𑍍𑌥𑍍𑌯𑌂 𑌸𑍍𑌵𑌂 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌶𑌤𑌶𑌿𑌰𑌸𑍍𑌸𑌿𑌦𑍍𑌧𑌮𑌧𑍍𑌯𑌾𑌪𑌯𑌨𑍍𑌤𑍀 ।
𑌸𑍍𑌵𑍋𑌚𑍍𑌛𑌿𑌷𑍍𑌟𑌾𑌯𑌾𑌂 𑌸𑍍𑌰𑌜𑌿 𑌨𑌿𑌗𑌳𑌿𑌤𑌂 𑌯𑌾 𑌬𑌲𑌾𑌤𑍍𑌕𑍃𑌤𑍍𑌯 𑌭𑍁𑌙𑍍𑌕𑍍𑌤𑍇
𑌗𑍋𑌦𑌾 𑌤𑌸𑍍𑌯𑍈 𑌨𑌮 𑌇𑌦𑌮𑌿𑌦𑌂 𑌭𑍂𑌯 𑌏𑌵𑌾𑌸𑍍𑌤𑍁 𑌭𑍂𑌯𑌃 ॥

அன்னவயற்புதுவை ஆண்டாளரங்கற்குப்
பன்னுதிருப்பாவைபல்பதியம்—,இன்னிசையாற் -
பாடிக்கொடுத்தாள் நற்பாமாலை, பூமாலை -
சூடிக்கொடுத்தாளைச்சொல். 2

சூடிக்கொடுத்தசுடர்க்கொடியே! தொல்பாவை
பாடியருளவல்லபல்வளையாய்!—,நாடிநீ -
'வேங்கடவற்கு என்னைவிதி'யென்றஇம்மாற்றம்
நாங்கடவாவண்ணமேநல்கு. 3

நாய்ச்சியார்திருமொழி

அல்லிநாட்டாமரைமேல் ஆரணங்கினின்துணைவி
மல்லிநாடாண்டமடமயில்—,மெல்லியலாள் -
ஆயர்குலவேந்தனாகத்தாள் தென்புதுவை
வேயர்பயந்தவிளக்கு.

பெருமாள்திருமொழி

இன்னமுதமூட்டுகேன் இங்கேவாபைங்கிளியே !
'தென்னரங்கம்பாடவல்லசீர்ப்பெருமாள்—,பொன்னஞ் -
சிலைசேர்நுதலியர்வேள் சேரலர்கோன் , எங்கள் -
குலசேகர'னென்றேகூறு. 1

ஆரங்கெடப் 'பரனன்பர்கொள்ளா'ரென்று, அவர்களுக்கே-
வாரங்கொடுகுடப்பாம்பிற்கையிட்டவன், மாற்றலரை -
வீரங்கெடுத்தசெங்கோற்கொல்லிகாவலன் வில்லவர்கோன்
சேரன்குலசேகரன்முடிவேந்தர்சிகாமணியே. 2

திருச்சந்தவிருத்தம்

தருச்சந்தப்பொழில்தழுவு தாரணியின்துயர்தீரத்
திருச்சந்தவிருத்தஞ்செய் திருமழிசைப்பரன்வருமூர்
கருச்சந்துங்காரகிலும் கமழ்கோங்குமணநாறும்
திருச்சந்தத்துடன்மருவு திருமழிசைவளம்பதியே. 1

உலகுமழிசையும் உள்ளுணர்ந்துதம்மில்
புலவர்புகழ்க்கோலால்தூக்க—,உலகுதனை -
வைத்தெடுத்தபக்கத்தும் மாநீர்மழிசையே
வைத்தெடுத்தபக்கம்வலிது. 2

திருமாலை

மற்றொன்றும்வேண்டா மனமே!மதிளரங்கர்
கற்றினம்மேய்த்தகழலிணைக்கீழ்—,உற்ற -
திருமாலைபாடுஞ்சீர்த் தொண்டரடித்[1]தூளெம்-
பெருமானை , எப்பொழுதும்பேசு.

---

1 'பொடி' எனும் பாடத்தில் தளை வழுவும்

திருப்பள்ளியெழுச்சி

தமெவ் உசுவா வாரவாஸ்ஷெவம்
ரஜெஜுஸயம் ராஜவஷஹுணீய‌ |
ஷூாவொாயிகீ௦ யொாzகூுத ஸுக்திஷானு௦
ஹக்ராஷீ ரெணா௦ ஹமவஜஉெெ ‖ 1

மண்டங்குடியென்பர் மாமறையோர், மன்னியசீர்த்-
தொண்டரடிப்பொடிதொன்னகரம்—,வண்டு -
திணர்த்தவயல் தென்னரங்கத்தம்மானைப் , பள்ளி -
யுணர்த்தும்பிரானுதித்தவூர். 2

அமலனுதிபிரான்

ஆவாஉவஉஉ நஹய ஹரி௦ ஸயாந௦
உயெ கவொாஉஹிதஉ.ஜிதாஙராதா |
சுஉஷூுதா௦ நயநயொவிஷயாஙராணா௦
யொ நிஸ்கோய உநவெ உநிவாஹந௦ த‌ ‖ 1

காட்டவேகண்டபாதகமலம் நல்லாடையுந்தி
தேட்டருமுதரபந்தம் திருமார்வுகண்டஞ்செவ்வாய்
வாட்டமில்கண்கள்மேனி முனியேறித்தனிபுகுந்து
பாட்டினாற்கண்டுவாழும் பாணர்தாள்பரவினோமே. 2

கண்ணிநுண்சிறுத்தாம்பு

அவிஜிதவிஷயாஙரஸ்ரொ:
உவநிஷஉாஉவமாநஉாதுஹொம: |
அவி வ மணவஸாதெஉகஸெஷீ
உயாரகவிஹூஉயெ உஉாவிரவஃ ‖ 1

வேறொன்றும்நானறியேன் ‘வேதந்தமிழ்செய்த
மாறன்சடகோபன்வண்குருகூர்—ஏறு , எங்கள் -
வாழ்வா’ரென்றேத்தும் மதுரகவியாரெம்மை -
ஆள்வார் , அவரேயரண். 2

## பெரியதிருமொழி

**𑌕𑌲𑌯𑌾𑌮𑌿 𑌕𑌲𑌿𑌧𑍍𑌵𑌂𑌸𑌂 𑌕𑌵𑌿𑌂 𑌲𑍋𑌕𑌦𑌿𑌵𑌾𑌕𑌰𑌂 |**
**𑌯𑌸𑍍𑌯 𑌗𑍋𑌭𑌿𑌃 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌾𑌭𑌿𑌰𑌾𑌵𑌿𑌦𑍍𑌯𑌂 𑌨𑌿𑌹𑌤𑌂 𑌤𑌮𑌃 ||**

வாழிபரகாலன் வாழிகலிகன்றி
வாழிகுறையலூர்வாழ்வேந்தன்—,வாழியரோ -
மாயோனைவாள்வலியால் மந்திரங்கொள்மங்கையர்கோன்
தூயோன்சுடர்மானவேல். 2

நெஞ்சுக்கிருள்கடிதீபம் அடங்காநெடும்பிறவி -
நஞ்சுக்குநல்லவமுதம் , தமிழ்நன்னூல்துறைகள் -
அஞ்சுக்கிலக்கியம் ஆரணசாரம் , பரசமயப் -
பஞ்சுக்கனலின்பொறி பரகாலன்பனுவல்களே. 3

எங்கள்கதியே! இராமானுசமுனியே !
சங்கைகெடுத்தாண்டதவராசா!—,பொங்குபுகழ் -
மங்கையர்கோனீந்த மறையாயிரமனைத்தும்
தங்குமனம்நீயெனக்குத்தா. 4

**தாண்டகம் இரண்டிற்கும் இவையே தனியன்**

## இயற்பா

### முதற்றிருவந்தாதி

கைதைசேர்பூம்பொழில்சூழ் கச்சிநகர்வந்துதித்த
பொய்கைப்பிரான்கவிஞர்போரேறு—,வையத் -
தடியவர்கள்வாழ அருந்[1]தமிழந்தாதி
படிவிளங்கச்செய்தான்பரிந்து.

### இரண்டாந்திருவந்தாதி

என்பிறவிதீர இறைஞ்சினேனின்னமுதா
'அன்பேதகளி'யளித்தானை—,நன்புகழ்சேர் -
சீதத்தார்முத்துக்கள்சேரும் கடன்மல்லைப்
பூதத்தார்பொன்னங்கழல்.

1 'தமிழ் நூற்றந்தாதி' எனும்பாடத்தில் தளை வழுவும்

### மூன்றாந்திருவந்தாதி

சீராருமாடத் திருக்கோவலூரதனுள்
காரார்கருமுகிலைக்காணப்புக்கு—,ஓராத் -
'திருக்கண்டேன்'னென்றுரைத்த சீரான்கழலே
உரைக்கண்டாய்நெஞ்சே! உகந்து.

### நான்முகன்திருவந்தாதி

'நாராயணன்படைத்தான் நான்முகனை, நான்முகனுக்கு -
ஏரார்சிவன்பிறந்தா'னென்னுஞ்சொல்—,சீரார் -
மொழிசெப்பி வாழலாம்நெஞ்சமே!, மொய்பூ-
மழிசைப்பரனடியேவாழ்த்து.

### திருவிருத்தம்

கருவிருத்தக்குழிநீத்தபின் காமக்கடுங்குழிவீழ்ந்து
ஒருவிருத்தம்புக்குழலுறுவீர்! உயிரின்பொருள்கட்கு
ஒருவிருத்தம்புகுதாமல் குருகையர்கோனுரைத்த
திருவிருத்தத்தோரடிகற்று இரீர்திருநாட்டகத்தே.

### திருவாசிரியம்

காசினியோர்தாம்வாழக் கலியுகத்தேவந்துதித்திட்டு
ஆசிரியப்பாவதனால் அருமறைநூல்விரித்தானைத்
தேசிகனைப்பராங்குசனைத் திகழ்வகுளத்தாரானை
மாசடையாமனத்துவைத்து மறவாமல்வாழ்த்துதுமே.

### பெரியதிருவந்தாதி

முந்துற்றநெஞ்சே! முயற்றிதரித்துரைத்து
வந்தித்துவாயார[1]வாழ்த்திநீ—,சந்த -
முருகூருஞ்சோலைசூழ் மொய்பூம்பொருநற் -
குருகூரன், மாறன்பேர்கூறு.

1 'வாழ்த்திச்—சந்த' எனும் பாடத்தில் தளை வழுவும்

திருவெழுகூற்றிருக்கை

வாழிபரகாலன் வாழிகலிகன்றி
வாழிகுறையலூர்வாழ்வேந்தன்—,வாழியரோ-
மாயோனைவாள்வலியால் மந்திரங்கொள்மங்கையர்கோன்
தூயோன்சுடர்மானவேல்.

சிறியதிருமடல்

முள்ளிச்செழுமலரோதாரான் , முளைமதியம் -
கொள்ளிக்கென்னுள்ளங்கொதியாமே—,வள்ளல்-
திருவாளன்சீர்க்கலியன் கார்க்கலியைவெட்டி
மருவாளன்தந்தான்மடல்.

பெரியதிருமடல்

பொன்னுலகில்வானவரும் பூமகளும்போற்றிசெய்யும்
நன்னுதலீர்!நம்பிநறையூரர்—,மன்னுலகில் -
என்னிலைமைகண்டும் இரங்காரேயாமாகில்
மன்னுமடலூர்வன்வந்து.

## திருவாய்மொழி

𑌭𑌕𑍍𑌤𑌾𑌮𑍃𑌤𑌂 𑌵𑌿𑌶𑍍𑌵𑌜𑌨𑌾𑌨𑍁𑌮𑍋𑌦𑌨𑌂
𑌸𑌰𑍍𑌵𑌾𑌰𑍍𑌥𑌦𑌂 𑌶𑍍𑌰𑍀𑌶𑌠𑌕𑍋𑌪𑌵𑌾𑌙𑍍𑌮𑌯𑌮𑍍 ।
𑌸𑌹𑌸𑍍𑌰𑌶𑌾𑌖𑍋𑌪𑌨𑌿𑌷𑌤𑍍𑌸𑌮𑌾𑌗𑌮𑌂
𑌨𑌮𑌾𑌮𑍍𑌯𑌹𑌂 𑌦𑍍𑌰𑌾𑌵𑌿𑌡𑌵𑍇𑌦𑌸𑌾𑌗𑌰𑌮𑍍 ॥ 1

திருவழுதிநாடென்றும் தென்குருகூரென்றும்
மருவினியவண்பொருநலென்றும்—,அருமறைகள் -
அந்தாதிசெய்தான் அடியிணையேயெப்பொழுதும்
சிந்தியாய்நெஞ்சே!தெளிந்து. 2

மனத்தாலும்வாயாலும் வண்குருகூர்பேணும்
இனத்தாரையல்லாதிறைஞ்சேன்—,தனத்தாலும் -
ஏதுங்குறைவிலேன் எந்தைசடகோபன்
பாதங்கள்யாமுடையபற்று. 3

ஏய்ந்தபெருங்கீர்த்தி இராமானுசமுனிதன்
வாய்ந்தமலர்ப்பாதம்வணங்குகின்றேன்—,ஆய்ந்தபெருஞ் -
சீரார்சடகோபன் செந்தமிழ்வேதந்தரிக்கும்
பேராதவுள்ளம்பெற. 4

✻ வான்திகழுஞ்சோலை மதிளரங்கர்வண்புகழ்மேல்
ஆன்றதமிழ்மறைகளாயிரமும்—,ஈன்ற -
முதல்தாய்சடகோபன் மொய்ம்பால்வளர்த்த -
இதத்தாய், இராமானுசன். 5

✻ மிக்கவிறைநிலையும் மெய்யாமுயிர்நிலையும்
தக்கநெறியுந்தடையாகித்—,தொக்கியலும் -
ஊழ்வினையும்வாழ்வினையுமோதும் குருகையர்கோன்
யாழினிசைவேதத்தியல். 6

இராமானுசநூற்றந்தாதி

முன்னைவினையகல மூங்கிற்குடியமுதன்
பொன்னங்கழற்கமலப்போதிரண்டும்—,என்னுடைய -
சென்னிக்கணியாகச்சேர்த்தினேன் தென்புலத்தார்க்கு
என்னுக்கடைவுடையேன்யான்? 1

நயந்தருபேரின்பமெல்லாம் பழுதென்றுநண்ணினர்பால்
சயந்தருகீர்த்தியிராமானுசமுனிதாளிணைமேல்
உயர்ந்தகுணத்துத்திருவரங்கத்தமுது ஓங்குமன்பால் -
இயம்பும், கலித்துறையந்தாதியோதஇசைநெஞ்சமே! 2

*சொல்லின்தொகைகொண்டுஉனதடிப்போதுக்குத்தொண்டுசெய்யும்
நல்லன்பரேத்துமுன்நாமமெல்லாம் என்றன்நாவினுள்ளே
அல்லும்பகலும் அமரும்படிநல்கு, அறுசமயம் -
வெல்லும்பரம! இராமானுச! இதென்விண்ணப்பமே. 3

**நாலாயிரத்தனியன் முற்றிற்று**

சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான்திருவடிகளே சரணம்

ஸ்ரீ:



## ஸ்ரீ தேசிகப் பிரபந்தம்

# அமிருதரஞ்சனி

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்.

தனியன்.

ராமாநுஜதயாபாத்ரம் ஜ்ஞாநவைராக்யபூஷணம் ।
ஸ்ரீமத்வேங்கடநாதார்யம் வந்தே வேதாந்ததேசிகம் ॥

சீரொன்று தூப்புல் திருவேங் கடமுடையான்
பாரொன்றச் சொன்ன பழமொழியுள்— ஓரொன்று
தானே அமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு
வானேறப் போமளவும் வாழ்வு.

---

❋ தம்பரமென்றிரங்கித் தளராமனந்தந்தருளால்
உம்பர்தொழுந்திருமால் உகந்தேற்குமுபாயமொன்றால்
நம்பிறவித்துயர்மாற்றிய ஞானப்பெருந்தகவோர்
சம்பிரதாய[1]மொன்றிச் சதிர்க்கும்[2]நிலைசார்ந்தனமே. 1

கடலமுதத்தைக்கடைந்துசேர்த்த
திருமாலடிகாட்டிய, நம் -
[3]தேசிகர்தம்நிலைபற்றிச்சேர்ந்தோமே. 2

முத்திக்கருள்சூட மூன்றைத்தெளிமுன்னம்
இத்திக்காலேற்கும்இதம். 3

மூன்றிலொருமூன்றும் மூவிரண்டும்மூந்நான்கும்
தோன்றத்தொலையுந்துயர். 4

---

1 ஒன்றால் 2 நெறி 3 தேசிகர்ச்சேர்ந்திருவினைகடிந்தோமே

உயிருமுடலும் உடலாகவோங்கித்
தயிர்வெண்ணெய்தாரணியோடுண்டான் — பயிரில் -
களைபோல் அசுரரைக்காய்ந்தான்தன்கையில்
வளைபோலெம்மாசிரியர்வாக்கு. 5

அலையற்றஆரமுதக்கடல் அக்கடலுண்டமுகில்
விலையற்றநன்மணிவெற்பு வெயில்நிலவோங்குபகல்
துலையுற்றனவென்பர் தூமறைசூடுந்துழாய்முடியாற்கு
இலையொத்தன அவன்பாதம்பணிந்தவர்க்கெண்ணுதற்கே. 6

உத்திதிகழும் உரைமூன்றில்மும்மூன்றும்
சித்தமுணரத்தெளிவித்தார் — முத்திதரும் -
மூலமறையின்முடிசேர் முகில்வண்ணன்
சீலமறிவார்சிலர். 7

எனக்குரியனெனதுபரமென்பேறென்னாது
இவையனைத்தும்இறையில்லாஇறைக்கடைத்தோம்
தனக்கிணையொன்றில்லாததிருமால்பாதம்
சாதனமும்பயனுமெனச்சலங்கள்தீர்ந்தோம்
உனக்குஇதமென்றுஒருபாகனுரைத்ததுற்றோம்
உத்தமனுமவனுதவியெல்லாம்[1]கண்டோம்
இனிக்கவருமவைகவரஇகந்தோம்சோகம்
இமையவரோடொன்றுஇனிநாமிருக்கும்நாளே. 8

தத்துவங்களெல்லாம் தகவாலறிவித்து
முத்திவழிதந்தார்மொய்கழலே — அத்திவத்தில் -
ஆரமுதம் ஆருமிருநிலத்திலென்றுரைத்தார்
தாரமுதலோதுவித்தார்தாம். 9

1 கொண்டோம்

திருநாரணனெனுந்தெய்வமும் சித்தும்அசித்துமென்று
பெருநான்மறைமுடிபேசிய தத்துவம்மூன்றிவைகேட்டு
ஒருநாளுணர்ந்தவர் உய்யும்வகையன்றிஒன்றுகவார்
இருநாலெழுத்தின் இதயங்களோதியஎண்குணரே. 10

காரணமாயுயிராகிஅனைத்துங்காக்கும்
கருணைமுகில்கமலையுடனிலங்குமாறும்
நாரணனார்வடிவானவுயிர்களெல்லாம்
[1]நாமென்றுநல்லடிமைக்கேற்குமாறும்
தாரணிநீர்முதலானமாயைகாலம்
தனிவானென்றிவைஉருவாந்தன்மைதானும்
கூரணிசீர்மதியுடையகுருக்கள்காட்டக்
குறிப்புடன்நாம்கண்டவகைகூறினோமே. 11

அப்படிநின்ற அமலன்படியெல்லாம்
இப்படிஎம்முள்ளத்தெழுதினார் — எப்படியும்
ஏரார்சுருதியொளியால் இருள்நீக்கும்
தாராபதியனையார்தாம். 12

செம்பொற்கழலிணைச் செய்யாளமருந்திருவரங்கர்
அன்பர்க்கடியவராய் அடிசூடியநாமுரைத்தோம்
இன்பத்தொகையெனஎண்ணிய மூன்றிலெழுத்தடைவே
ஐம்பத்தொருபொருள் ஆருயிர்காக்குமமுதெனவே. 13

யான்அறியுஞ்சுடராகிநின்றேன் மற்றும்யாதுமலேன்
வானமருந்திருமாலடியேன் மற்றோர்பற்றுமிலேன்
தானமுதாமவன்தன் சரணேசரணென்றடைந்தேன்
மானமிலாஅடிமைப்பணிபூண்டமனத்தினனே. 14

1 நாம்வென்று, நமவென்று

சீலங்கவர்ந்திடும் தேசிகர்தேசின்பெருமையினால்
தூலங்களன்ன துரிதங்கள்மாய்ந்தன, துஞ்சல்தருங் -
கோலங்கழிந்திடக் கூறியகாலங்குறித்துநின்றோம்
மேலிங்குநாம்பிறவோம் வேலைவண்ணனைமேவுதுமே. 15

வண்மையுகந்தஅருளால் வரந்தரும்மாதவனார்
உண்மையுணர்ந்தவர் ஓதுவிக்கின்றஉரைவழியே
திண்மைதருந்தெளிவொன்றால் திணியிருள்நீங்கியநாம்
தண்மைகழிந்தனம் தத்துவங்காணுந்தரத்தினமே 16

நாராயணன்பரன் நாம்அவனுக்குநிலையடியோம்
சோராதனைத்தும் அவனுடம்பென்னுஞ்சுருதிகளால்
சீரார்பெருந்தகைத்தேசிகர் எம்மைத்திருத்துதலால்
தீராமயலகற்றும் திறம்பாத்தெளிவுற்றனமே. 17

ஒன்றேபுகலென்று உணர்ந்தவர்காட்டத், திருவருளால்
அன்றேயடைக்கலங்கொண்ட நம்மத்திகிரித்திருமால்
இன்றேயிசையின்இணையடிசேர்ப்பர் இனிப்பிறவோம்
நன்றேவருவதெல்லாம் நமக்குப்பரமொன்றிலதே. 18

சிறுபயனிற்படியாததகவோரெம்மைச்-
சேர்க்க அடைக்கலங்கொண்டதிருமால், தானே -
மறுபிறவியறுத்துஅழியாவானில்வைக்கும்
மனமே!நீமகிழாதேயிருப்பதென்கொல் ?
உறுவதுனக்குரைக்கேன்[1] இங்கிருக்குங்காலம்
ஒருபிழையும்புகுதாதவுணர்த்திவேண்டிப்
பெறுவதெலாமிங்கேநாம்பெற்றுவாழப்
பேரடிமையாலேதென்றிகழேல்நீயே. 19

1 இவ்விருந்த

சாக்கியர்சைனர்கள் சார்வாகர்சாங்கியர்சைவர், மற்றுந் -
தாக்கியர் நூல்கள்சிதையத் தனிமறையின் கருத்தை
வாக்கியம்முப்பதினால் வகைசெய்துவியாகரித்தோம்
தேக்கிமனத்துள் இதனைத் திணியிருள் நீங்குமினே. 20

தள்ளத்துணியினும் தாய்போலிரங்குந்தனித்தகவால்
உள்ளத்துறைகின்ற உத்தமன் தன்னையுணர்ந்துரைத்தோம்
முள்ளொத்தவாதியர் முன்னேவரினெங்கள் முக்கியர்பால்
வெள்ளத்திடையில்நரிபோல் விழிக்கின்றவீணர்களே. 21

செய்யேல்மறமென்று தேசிகன்[1] தாதையவனுரைத்த
மெய்யே[2]யருள்பொருள் சூடியவெண்மதிகாதலியாம்
பொய்யே[3]பகைப்புலன் ஐயிரண்டொன்றுபொருங்கருவி
கையேறுசக்கரக்காவலன் [4]காவலடைந்தவர்க்கே. 22

அந்தமிலாதிதேவனழிசெய்தடைந்த
அலைவேலையோதமடையச்
செந்தமிழ்நூல்வகுத்தசிறுமாமனிச்சர்
சிறுகைச்சிறுங்கையதுபோல்
சந்தமெலாமுரைப்ப இவையென்று தங்கள் -
இதயத்தடக்கி, அடியோம் -
பந்தமெலாமறுக்க அருள்தந்துகந்து
பரவும்பொருள்கள் இவையே. 23

முக்குணமாயையின் மூவெட்டின்கீழ்வரும்மூவகையும்
இக்குணமின்றியிலங்கிய காலச்சுழியினமும்
நற்குணமொன்றுடைநாகமும் நாராயணனுடம்பாய்ச்
சிற்குணமற்றவையென்று உரைத்தாரெங்கள்தேசிகரே.

1 தேவன் கருத்து
2 அரும்
3 பகைபுலன்
4 காதல்

எனதென்பதும் (இ)யானெனன்பதுமன்றித்
தனதென்றுதன்னையுங்காணுது — உனதென்று -
மாதவத்தால்மாதவற்கே வன்பரமாய்மாய்ப்பதனில்
கைதவத்தான்கைவளரான்காண். 25

பல்வினைவன்கயிற்றல் பந்தமுற்றுழல்கின்றனரும்
நல்வினைமூட்டிய நாரணனர்பதம்பெற்றவரும்
தொல்வினைஎன்றுமில்லாச் சோதிவானவரும், சுருதி -
[1]செல்வினையோர்க்கவர் சீவரென்றேதச்சிறந்தனமே. 26

ஆரணங்களெல்லாம் அடிகூடமேல்நின்ற
காரணமாய்ஒன்றால் கலங்காதான்— நாரணனே -
நம்மேல்வினைகடியும் நல்வழியில்தான்நின்று
தன்மேனிதந்தருளும்தான். 27

குடல்மிசையொன்றியும் கூடியும்நின்றகொடுந்துயரும்
உடல்மிசைத்தோன்றுமுயிரும் உயிர்க்குயிராமிறையும்
கடல்மிசைக்[2]கண்டதாளத்திரள் அவைகோத்தபொன்னூல்
மடல்மிசைவார்த்தையதன்பொருளென்னவகுத்தனமே.

தத்துவந்தன்னில் விரித்திடத்தோன்றுமிரண்டுதனில்
பத்திவிலக்கிய பாசண்டர்வீசுறும்பாசமுறுர்
எத்திசையுந்தொழுதேத்தியகீர்த்தியர், எண்டிசையார் -
சுத்தருரைத்த சுளகமருந்தியதூயவரே. 29

வினைத்திரள்[3]மாற்றிய வேதியர்தந்தநல்வாசகத்தால்
அனைத்துமறிந்தபின் ஆறும்பயனுமெனவடைந்தோம்
மனத்திலிருந்து மருத்தமுதாகியமாதவனர்
நினைத்தல்மறத்தல்அரிதாய நன்னிழல்நீள்கழலே. 30

1 சொல்வினை 2 கண்டவைதானத்திரள்வைபோர்த்த 3 பாற்றிய

ஓதுமறைநான்கதனில் ஓங்குமொருமூன்றினுள்ளே
நீதிநெறிவழுவாநிற்கின்றோம் — போதமரும் -
பேராயிரமும்திருவும்பிரியாத
நாராயணனருளால்நாம். 31

ஊன்தந்துநிலைநின்றவுயிருந்தந்து ஓர் -
உயிராகியுள்ளொளியோடுறைந்தநாதன்
தான்தந்தஇன்னுயிரைஎனதென்றுமல்
நல்லறிவுந்தந்துஅகலாநலமுந்தந்து
தான்தந்தநல்வழியால்தாழ்ந்தவென்னைத்
தன்தனக்கேபரமாகத்தானேயெண்ணி
வான்தந்துமலரடியுந்தந்து வானோர் -
வாழ்ச்சிதரமன்னருளால்வரித்திட்டானே. 32

திருமாலடியிணையே திண்சரணாக்கொண்டு
திருமாலடியிணையேசேர்வார் — ஒருமால் -
அருளால்[1]அருளாத வானோர்கள்வாழ்ச்சி
அருளால்நமக்களித்தாராய்ந்து. 33

சேர்க்குந்திருமகள்சேர்த்தியில்மன்னுதல் சீர்ப்பெரியோர்க்கு
ஏற்குங்குணங்கள் இலக்காம்வடிவிலிணையடிகள்
பார்க்குஞ்சரணத்திற்பற்றுதல் நம்நிலைநாம்பெறும்பேறு
ஏற்குமவற்றினுளெல்லாம் களையறவெண்ணினமே. 34

திருமாலடியிணைசேர்ந்து திகழ்ந்தஅடிமைபெறத்
திருநாரணன்சரண் திண்சரணாகத்துணிந்தடைவோர்
ஒருநாளுரைக்க உயிர்தரும்மந்திரமோதியநாம்
வருநாள்பழுதற்று வாழும்வகையதில்மன்னுவமே. 35

---

1 உருளாத

மற்றொருபற்றின்றி வந்தடைந்தார்க்கெல்லாம்
குற்றமறியாதகோவலனார் — முற்றும் -
வினைவிடுத்து விண்ணவரோடொன்றவிரைகின்றார்
நினைவுடைத்தாய்நீமனமேநில்லு. 36

எல்லாத்தருமமும்என்னையிகழ்ந்திடத் தான்இகழாது
எல்லாந்தனதென எல்லாமுகந்தருள்தந்தபிரான்
மல்லார்மதக்களிறொத்த வினைத்திரள்மாய்ப்பனென்ற -
சொல்லால், இனியொருகால்சோகியாத்துணிவுற்றனமே.

❋ வினைத்திரள்மாற்றிய வேதியர்தந்தருள்வாசகத்தால்
அனைத்துமறிந்தபின் ஆறும்பயனுமெனவடைந்தோம்
மனத்திலிருந்து மருத்தமுதாகியமாதவனார்
நினைத்தல்மனத்தில்அரிதாகி நின்றன நீள்கழலே. 38

❋ எட்டிலாறிரண்டிலொன்றில் எங்கும்ஆறியம்புவார்
விட்டஆறுபற்றும்ஆறு வீடுகண்டுமேவுவார்
சிட்டரானதேசுயர்ந்த தேசிகர்க்குயர்ந்துமேல்
எட்டுமூன்றும்ஊடறுத்தது எந்தைமால்இரக்கமே. 39

அமிருதரஞ்சனி முற்றிற்று.

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்.

---

அடிவரவு— தம்பரம், கடல்முத, முத்திக்கு, மூன்றில், உயிரும், அலையற்ற, உத்தி, எனக்கு, தத்துவங்கள், திருநாரணன், காரணமாயுயிர்.

காரணமாயுயிர், அப்படி, செம்பொன், யானறி, சீலம், வண்மை, நாராயணன், ஒன்றே, சிறுபயன், சாக்கியர், தள்ள.

தள்ள, செய்யேல், அந்தமிலாதி, முக்குணமாயை, எனது, பல்வினை, ஆரணங்களெல்லாம், குடல், தத்துவந்தன்னில், வினைத்திரள், ஓதுமறை.

ஓதுமறை, ஊன்தந்து, திருமாலடியிணையே, சேர்க்குந்திருமகள், திருமாலடியிணைசேர்ந்து, மற்றொரு, எல்லாத்தரும, வினைத்திரள், எட்டிலாறு, பொய்கை.

ஸ்ரீ:

# அதிகாரசங்கிரகம்

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

தனியன்

𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌦𑌯𑌾𑌪𑌾𑌤𑍍𑌰𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌭𑍂𑌷𑌣𑌮𑍍 ।
𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌵𑍇𑌙𑍍𑌕𑌟𑌨𑌾𑌥𑌾𑌰𑍍𑌯𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌦𑍇𑌶𑌿𑌕𑌮𑍍 ॥

சீரொன்று தூப்புல் திருவேங் கடமுடையான்
பாரொன்றச் சொன்ன பழமொழியுள்— ஓரொன்று
தானே அமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு
வானேறப் போமளவும் வாழ்வு.

---

❋ பொய்கைமுனிபூதத்தார்பேயாழ்வார் தண் -
பொருநல்வருங்குருகேசன்விட்டுசித்தன்
துய்யகுலசேகரன்நம்பாணநாதன்
தொண்டரடிப்பொடிமழிசைவந்தசோதி
வையமெலாம்மறைவிளங்கவாள்வேலேந்தும்
மங்கையர்கோனென்றிவர்கள்மகிழ்ந்துபாடும்
செய்யதமிழ்மாலைகள்நாம்தெளியவோதித்
தெளியாதமறைநிலங்கள்தெளிகின்றோமே. 1

இன்பத்திலிறைஞ்சுதலிலிசையும்பேற்றில்
இகழாதபல்லுறவிலிராகமாற்றில்
தன்பற்றில்வினைவிலக்கில்தகவோக்கத்தில்
தத்துவத்தையுணர்த்துதலில்தன்மையாக்கில்
அன்பர்க்கேயவதரிக்குமாயன்நிற்க
அருமறைகள்தமிழ்செய்தான்தாளேகொண்டு
துன்பற்றமதுரகவிதோன்றக்காட்டும்
தொல்வழியேநல்வழிகள்துணிவார்கட்கே. 2

* என்னுயிர்தந்தளித்தவரைச்சரணம்புக்கு
யானடைவே அவர்குருக்கள்நிரைவணங்கிப்
பின்னருளாற்பெரும்பூதூர்வந்தவள்ளல்
பெரியநம்பி ஆளவந்தார்மணக்கால்நம்பி
நன்னெறியையவர்க்குரைத்தஉய்யக்கொண்டார்
நாதமுனிசடகோபன்சேனைநாதன்
இன்னமுதத்திருமகளென்றிவரைமுன்னிட்டு
எம்பெருமான்திருவடிகளடைகின்றேனே. 3

ஆரணநூல்வழிச்செவ்வை அழித்திடுமைதுகர்க்கு, ஓர் -
வாரணமாய் அவர்வாதக்கதலிகள்மாய்த்தபிரான்
ஏரணிகீர்த்தி இராமானுசமுனி இன்னுரைசேர்
சீரணிசிந்தையினோம் சிந்தியோமினித்தீவினையே. 4

நீளவந்து இன்றுவிதிவகையால்நினைவொன்றியநாம்
மீளவந்து இன்னும்வினையுடம்பொன்றிவிழுந்துழலாது
ஆளவந்தாரென வென்றருள்தந்துவிளங்கியசீர்
ஆளவந்தாரடியோம் படியோமினிஅல்வழக்கே. 5

காளம்வலம்புரியன்ன நற்காதலடியவர்க்குத்
தாளம்வழங்கித் தமிழ்மறைஇன்னிசைதந்தவள்ளல்
மூளுந்தவநெறிமூட்டிய நாதமுனிகழலே
நாளுந்தொழுதெழுவோம் நமக்கார்நிகர்நானிலத்தே. 6

* ஆளுமடைக்கலமென்றெமை அம்புயத்தாள்கணவன் -
தாளிணைசேர்ந்து, எமக்குமவைதந்ததகவுடையார்
மூளுமிருட்கள்விளமுயன்று ஓதியமூன்றினுள்ளம்
நாளுமுகக்கவிங்கே நமக்கோர்விதிவாய்க்கின்றதே! 7

அந்தாதித்தொடை

* திருவுடன்வந்தசெழுமணிபோல் திருமாலிதயம் -
மருவிடமென்ன, மலரடிசூடும்வகைபெறுநாம்
கருவுடன்வந்தகடுவினையாற்றில் விழுந்தொழுகாது
அருவுடனைந்தறிவார் அருள்செய்யஅமைத்தனரே. 8

அமையாவிவையெனுமாசையினல் அறுமூன்று, உலகிற் -
சுமையானகல்விகள்சூழவந்தாலும் தொகையிவைஎன்று
இமையாவிமையவரேத்திய எட்டிரண்டெண்ணிய, நம் -
சமயாசிரியர் சதிர்க்குந்தனிநிலைதந்தனரே. 9

நிலைதந்தகாரகனாய் நியமிக்கு[1]மிறைவனுமாய்
இலதொன்றெனவகை எல்லாந்தனதெனுமெந்தையுமாய்த்
துலையொன்றிலையெனநின்ற துழாய்முடியானுடம்பாய்
விலையின்றிநாமடியோமென்று வேதியர்மெய்ப்பொருளே.

பொருளொன்றெனநின்ற பூமகள்நாதன், அவனடிசேர்ந்து -
அருளொன்றுமன்பன் அவன்சொலுபாயம் - அமைந்தபயன்
மருளொன்றியவினைவல்விலக்கென்று இவை - யைந்தறிவார்
இருளொன்றிலாவகை எம்மனந்தேற - வியம்பினரே. 11

தேறவியம்பினர் சித்துமசித்துமிறையுமென
வேறுபடும் வியன்தத்துவமூன்றும், வினையுடம்பிற் -
கூறுபடுங்கொடுமோகமும் தானிறையாங்குறிப்பும்
மாறநினைந்தருளால் மறைநூல்தந்தவாதியரே. 12

1 மொருவனுமாய்

வாதியர்மன்னுந்தருக்கச்செருக்கின் மறைகுலையச்
சாதுசனங்களடங்கநடுங்கத் தனித்தனியே
ஆதியெனுவகை ஆரணதேசிகர்சாற்றினர், நம் -
போதமருந்திருமாதுடன் நின்றபுராணனையே. 13

நின்றபுராணனடியிணையேந்தும் நெடும்பயனும்
பொன்றுதலேநிலையென்றிடப் பொங்கும்பவக்கடலும்
நன்றிதுதீயதிதென்று நவின்றவர்நல்லருளால்
வென்றுபுலன்களை வீடினைவேண்டும்பெரும்பயனே. 14

வேண்டும்பெரும்பயன்வீடென்றறிந்து விதிவகையால்
நீண்டுங்குறுகியும்நிற்கும் நிலைகளுக்கேற்குமன்பர்
மூண்டொன்றில்மூலவினைமாற்றுதலில் முகுந்தனடி -
பூண்டன்றி, மற்றோர்புகலொன்றிலையெனநின்றனரே.

நின்றநிலைக்குற நிற்குங்கருமமும், நேர்மதியால் -
நன்றெனநாடியஞானமும் நல்குமுட்கண்ணுடையார்
ஒன்றியபத்தியும் ஒன்றுமிலா[1]விரைவார்க்கு, அருளால்-
அன்றுபயன்தருமாறும் அறிந்தவரந்தணரே. 16

அந்தணரந்தியரெல்லையில்நின்ற அனைத்துலகும்
நொந்தவரேமுதலாக நுடங்கியனன்னியராய்
வந்தடையும்வகை வன்தகவேந்திவருந்திய, நம் -
அந்தமிலாதியை அன்பரறிந்தறிவித்தனரே. 17

அறிவித்தனரன்பர் ஐயம்பறையுமுபாயமில்லாத்
துறவித்துனியில் துணையாம்பரனைவரிக்கும்வகை
உறவித்தனையின்றி ஒத்தாரெனநின்றவும்பரைநாம்
பிறவித்துயர்செகுப்பீரென்று [2]இரக்கும்பிழையறவே. 18

1 இரவார்க்கு 2 இருக்கும்

அறவேபரமென்று அடைக்கலம்வைத்தனர், அன்றுநம்மைப்-
பெறவேகருதிப் பெருந்தகவுற்றபிரானடிக்கீழ்
உறவேயிவனுயிர்காக்கின்ற ஒருயிருண்மையை, நீ-
மறவேலென நம்மறைமுடிசூடியமன்னவரே. 19

மன்னவர்விண்ணவர் வானோரிறை[1]யொன்றும்-
வான்கருத்தோர்
அன்னவர்வேள்வியனைத்துமுடித்தனர்,
அன்புடையார்க்கு-
என்னவரந்தரவென்ற நம்மத்தி-
கிரித்திருமால்
முன்னம்வருந்தி அடைக்கலங்கொண்டநம்-
முக்கியரே. 20

முக்கியமந்திரங்காட்டிய மூன்றில்நிலையுடையார்
தக்கவையன்றித் தகாதவையொன்றுந்தமக்கிசையார்
இக்கருமங்கள் எமக்குளவென்னுமிலக்கணத்தால்
மிக்கவுணர்த்தியர் மேதினிமேவியவிண்ணவரே. 21

விண்ணவர்வேண்டிவிலக்கின்றிமேவும் அடிமையெல்லாம்
மண்ணுலகத்தில் மகிழ்ந்தடைகின்றனர், வண்துவரைக்-
கண்ணனடைக்கலங்கொள்ளக் கடன்கள்கழற்றிய, நம்-
பண்ணமருந்தமிழ்வேதமறிந்தபகவர்களே. 22

வேதமறிந்தபகவர்வியக்க விளங்கியசீர்
நாதன்வகுத்தவகைபெறுநாம் அவன்நல்லடியார்க்கு
ஆதரமிக்கஅடிமையிசைந்து அழியாமறைநூல்
நீதிநிறுத்த நிலைகுலையாவகைநின்றனமே. 23

---

1 என்றும், என்னும்

நின்றனமன்புடைவானோர்நிலையில் நிலமளந்தான்
நன்றிதுதீயதிதென்று நடத்தியநான்மறையால்
இன்றுநமக்கிரவாதலின் இம்மதியின்நிலவே -
யன்றி, அடிக்கடிஆரிருள்தீர்க்கஅடியுளதே ? 24

உளதானவல்வினைக்கு உள்ளம்வெருவி, உலகளந்த -
வளர்தாமரையிணை வன்சரணாகவரித்தவர்தாம்
களைதானெனவெழும் கன்மந்துறப்பர், துறந்திடிலும்-
இளைதாநிலைசெக எங்கள்பிரானருள்தேனெழுமே. 25

※ தேனார்கமலத்திருமகள்நாதன் திகழ்ந்துறையும்
வானாடுகந்தவர் வையத்திருப்பிடம், வன்தருமக் -
கானாரிமயமுங்கங்கையும் காவிரியுங்கடலும்
நானாநகரமும் நாகமுங்கூடியநன்னிலமே. 26

நன்னிலமாமது நற்பகலாமது, நன்னிமித்த -
மென்னலுமாமது [1]யாதானுமாமங்கடியவர்க்கு
மின்னிலைமேனி விடும்பயணத்து, விலக்கிலதோர்
நன்னிலையாம்நடுநாடிவழிக்கு நடைபெறவே. 27

நடைபெறஅங்கிபகல்ஒளிநாள் உத்தராயணமாண்டு
இடைவருகாற்றிரவி இரவின்பதிமின்வருணன்
[2]குடையுடைவானவர்கோன் பிரசாபதியென்றிவரால்
இடையிடைபோகங்களெய்தி எழிற்பதமேறுவரே. 28

ஏறியெழிற்பதம் எல்லாவுயிர்க்குமிதமுகக்கும்
நாறுதுழாய்முடிநாதனைநண்ணி, அடிமையில்நங்
கூறு[3]கவர்ந்த குருக்கள்குழாங்கள்குரைகழற்கீழ்
மாறுதலின்றி மகிழ்ந்தெழும்போகத்துமன்னுவமே. 29

1 யாதாமரங்கரடியவர்க்கு  2 கொடை  3 கவர்ந்து

✻ மன்னும்அனைத்துறவாய் மருள்மாற்றருளாழியுமாய்த்
தன்நினைவாலனைத்தும் தரித்தோங்குந்தனியிறையாய்
இன்னமுதத்தமுதால் இரங்குந்திருநாரணனே
மன்னியவன்சரண் மற்றோர்பற்றின்றிவரிப்பவர்க்கே. 30

“ வரிக்கின்றனன்பரன்யாவரை”என்று மறையதனில்
விரிக்கின்றதும் குறியொன்றால்வினையரையாதலின்நாம்
உரைக்கின்றநன்னெறி ஒரும்படிகளிலோர்ந்து , உலகந்-
தரிக்கின்றதாரகனார் தகவால்தரிக்கின்றனமே. 31

தகவால்தரிக்கின்ற தன்னடியார்களைத்தன்திறத்தில்
மிகவாதரஞ்செயும் மெய்யருள்வித்தகன்மெய்யுரையின்
அகவாயறிந்தவர் ஆரணநீதிநெறிகுலைதல் -
உகவாரெனா , எங்கள்தேசிகருண்மையுரைத்தனரே. 32

உண்மையுரைக்குமறைகளில் ஓங்கியவுத்தமனார்
வண்மையளப்பரிதாதலின் வந்துகழல்பணிவார்
தண்மை[1]கிடக்கத் தரமளவென்றவியப்பிலதாம்
உண்மையுரைத்தனர் ஓரந்தவிரவுயர்ந்தனரே. 33

உயர்ந்தனன்காவலனல்லார்க்கு உரிமைதுறந்துயிராய்
மயர்ந்தமைதீர்ந்து மற்றோர்வழியின்றியடைக்கலமாய்ப்
பயந்தவன்நாரணன் பாதங்கள்[2]சேர்ந்து , பழவடியார் -
நயந்தகுற்றேவலெல்லாம்நாடும் நன்மனுவோதினமே. 34

[3]ஓதுமிரண்டையிசைந்து அருளாலுதவுந்திருமால்
பாதமிரண்டும் சரணெனப்பற்றி , நம்பங்கயத்தாள் -
நாதனைநண்ணி நலந்திகழ்நாட்டிலடிமையெல்லாம்
கோதிலுணர்த்தியுடன் கொள்ளுமாறுகுறித்தனமே. 35

1 கிடந்திடத்தாமளவென்னவியப்பிலதாம் 2 சேர்ந்த 3 ஓதிய

குறிப்புடன்மேவும் தருமங்களின்றி, அக்கோவலனார் -
வெறித்துளவக்கழல் மெய்யரணென்றுவிரைந்தடைந்து
பிரித்தவினைத்திரள் பின்தொடராவகை, அப்பெரியோர்-
மறிப்புடைமன்னருள்வாசகத்தால் மருளற்றனமே. 36

மருளற்றதேசிகர் வானுகப்பாலிந்தவையமெல்லாம்
இருளற்று இறைவனிணையடி[1] பூண்டுயவெண்ணுதலால்
தெருளுற்றசெந்தொழிற்செல்வம்பெருகிச் சிறந்தவர்பால்
அருளுற்றசிந்தையினால் அழியாவிளக்கேற்றினரே. 37

ஏற்றிமனத்தெழில்ஞானவிளக்கை இருளனைத்தும் -
மாற்றினவர்க்கு, ஒருகைம்மாறு மாயனுங்காணகில்லான்
போற்றியுகப்பதும் புந்தியிற்கொள்வதும், பொங்குபுகழ் -
சாற்றிவளர்ப்பதும் சற்றல்லவோமுன்னம்பெற்றதற்கே!

முன்பெற்றஞானமும் [2]மோகந்துறக்கலும், மூன்றுரையில்-
[3]தன்பற்றதன்மையும் தாழ்ந்தவர்க்கீயுந்தனித்தகவும்
மன்பற்றிநின்றவகை உரைக்கின்றமறையவர்பால்
சின்பற்றிஎன்பயன்? சீரறிவோர்க்கிவைசெப்பினமே.

❋ செப்பச்செவிக்கமுதென்னத்திகழும் செழுங்குணத்துத்
தப்பற்றவருக்குத் தாமேயுகந்துதருந்தகவால்
ஒப்பற்றநான்மறையுள்ளக்கருத்தில் உறைத்துரைத்த
முப்பத்திரண்டிவை முத்தமிழ்சேர்ந்தமொழித்திருவே. 40

[திருவுடன்வந்தசெழுமணிபோல் திருமாலிதயம் -
மருவிடமென்ன, மலரடிசூடும்வகைபெறுநாம்
கருவுடன்வந்தகடுவினையாற்றில் விழுந்தொழுகாது
அருவுடனைந்தறிவார் அருள்செய்யஅமைந்தனரே.]

---

1 பூண்டிட 2 மோகத்துறக்கலும் 3 தன்பெற்ற

✻ புருடன்மணிவரமாகப்பொன்றுமூலப் -
பிரகிருதிமறுவாக மான்தண்டாகத்
தெருள்மருள்வாள்மறைவாக ஆங்காரங்கள் -
சார்ங்கஞ்சங்காகமனந்திகிரியாக
இருடிகங்களீரைந்துஞ்சரங்களாக
இருபூதமாலைவனமாலையாகக்
கருடனுருவாமறையின்பொருளாங்கண்ணன்
கரிகிரிமேல்நின்றுஅனைத்துங்காக்கின்றானே. 41

✻ ஆராதவருளமுதம்பொதிந்தகோயில்
அம்புயத்தோனயோத்திமன்னற்களித்தகோயில்
தோலாததனிவீரன்தொழுதகோயில்
துணையானவீடணற்குத்துணையாங்கோயில்
சேராதபயனெல்லாஞ்சேர்க்குங்கோயில்
செழுமறையின்முதலெழுத்துச்சேர்ந்தகோயில்
தீராதவினையனைத்துந்தீர்க்குங்கோயில்
திருவரங்கமெனத்திகழுங்கோயில்தானே. 42

✻ கண்ணனடியிணையெமக்குக்காட்டும்வெற்பு
கடுவினையரிருவினையுங்கடியும்வெற்பு
திண்ணமிதுவீடென்னத்திகழும்வெற்பு
தெளிந்தபெருந்தீர்த்தங்கள்செறிந்தவெற்பு
புண்ணியத்தின்புகலிதெனப்புகழும்வெற்பு
பொன்னுலகிற்போகமெலாம்புணர்க்கும்வெற்பு
விண்ணவருமண்ணவரும்விரும்பும்வெற்பு
வேங்கடவெற்பெனவிளங்கும்வேதவெற்பே. 43

✻ உத்தமவமர்த்தலமமைத்ததொரெழிற்றனு -
வுயர்த்தகணையால்
அத்திரவரக்கன்முடிபத்துமொருகொத்தென -
வுதிர்த்ததிறலோன்
மத்துறுமிகுத்ததயிர்மொய்த்தவெண்ணெய்வைத்ததுணு -
மத்தனிடமாம்
அத்திகிரிபத்தர்வினைதொத்தறவறுக்குமணி -
யத்திகிரியே. 44

எட்டுமாமூர்த்தியெண்கணன் எண்டிக் -
கெட்டிறையெண்பிரகிருதி
எட்டுமாவரைகளீன்றவெண்குணத்தோன்
எட்டெனுமெண்குணமதியோர்க்கு
எட்டுமாமலரெண்சித்தியெண்பத்தி
எட்டியோகாங்கமெண்செல்வம்
எட்டுமாகுணமெட்டெட்டெனுங்கலை எட் -
டிரதமேலதுவுமெட்டினவே. 45

ஒண்டொடியாள்திருமகளுந்தானுமாகி
ஒருநினைவாலீன்றவுயிரெல்லாமுய்ய
வண்டுவரைநகர்வாழவசுதேவற்காய்
மன்னவற்குத்தேர்ப்பாகனாகிநின்ற
தண்டுளவமலர்மார்பன்தானேசொன்ன
தனித்தருமந்தானெமக்காய்த், தன்னையென்றுங் -
கண்டுகளித்தடிசூடவிலக்காய்நின்ற
கண்புதையல்விளையாட்டைக்கழிக்கின்றானே. 46

மூண்டாலுமரியதனின் முயலவேண்டா
முன்னமதிலாசைதனைவிடுகைதிண்மை
வேண்டாதுசரணநெறிவேறோர்கூட்டு
வேண்டிலயனத்திரம்போல்வெள்கிநிற்கும்
நீண்டாகுநிறைமதியோர்நெறியிற்கூடா
நின்றனிமைதுணையாகவென்றன்பாகம் -
பூண்டால், உன்[1]பிழைகளெலாம்பொறுப்பனென்ற
புண்ணியனூர்புகழனைத்தும்புகழுவோமே. 47

சாதனமுநற்பயனுநானேயாவன்
சாதகனுமென்வயமாயென்னைப்பற்றும்
சாதனமுஞ்சரணநெறியன்றனக்குச்
சாதனங்களிங்கிலைக்கோரிடையினில்லா
வேதனைசேர்வேறங்கமிதனில்வேண்டா
வேறெல்லாநிற்குநிலைநானேநிற்பன்
தாதனுமாநாதனுமாமென்னைப்பற்றிச்
சோகந்தீரெனவுரைத்தான்சூழ்கின்றானே. 48

தன்னினைவில்விலக்கின்றித் தன்னைநண்ணார் -
நினைவனைத்துந்தான்விளைத்தும்விலக்குநாதன்
எந்நினைவையிப்பவத்திலின்றுமாற்றி
இணையடிக்கீழடைக்கலமென்றெம்மைவைத்து
முன்னினைவால்யாமுயன்றவினையால்வந்த
முனிவயர்ந்துமுத்திதரமுன்னேதோன்றி
நன்னினைவால்நாமிசையுங்காலம் இன்றோ -
நாளையோவென்றுநகைசெய்கின்றானே. 49

1 வினை

✻ பாட்டுக்குரியபழையவர்மூவரைப் பண்டொருகால்
மாட்டுக்கருள்தருமாயன் மலிந்துவருத்துதலால்
நாட்டுக்கிருள்செக நான்மறையந்திநடைவிளங்க
வீட்டுக்கிடைகழிக்கே வெளிகாட்டுமம்மெய்விளக்கே. 50

✻ உறுசகடமுடையவொருகாலுற்றுணர்ந்தன
உடன்மருதமொடியவொருபோதிற்றவழ்ந்தன
உறிதடவுமளவிலுரலோடுற்றுநின்றன
உறுநெறியொர்தருமன்விடுதூதுக்குகந்தன
மறநெறியர்மறிய[1]பிரதானத்துவந்தன
மலர்மகள்கைவருடமலர்போதிற்சிவந்தன
மறுபிறவியறுமுனிவர்மாலுக்கிசைந்தன
மனுமுறையில்வருவதொர்விமானத்துறைந்தன
அறமுடையவிசயனமர்தேரிற்றிகழ்ந்தன
அடலுரகபடமடியவாடிக்கடிந்தன
அறுசமயமறிவரியதானத்தமர்ந்தன
அணிகுருகைநகர்[2]முனிவர்நாவுக்கமைந்தன
வெறியுடையதுளவமலர்வீறுக்கணிந்தன
விழுகரியொர்குமரனெனமேவிச்சிறந்தன
விறலசுரர்படையடையவீயத்தொடர்ந்தன
விடலரியபெரியபெருமாள்மெய்ப்பதங்களே. 51

மறையுரைக்கும்பொருளெல்லாமெய்யென்றோர்வார்
மன்னியகூர்மதியுடையார், வண்குணத்தில் -
குறையுரைக்கநினைவில்லார் குருக்கள்தம்பால் -
கோதற்றமனம்பெற்றார்கொள்வார்[3]நன்மை
சிறைவளர்க்குஞ்சிலமாந்தர்சங்கேதத்தால்
சிதையாததிண்மதியோர்[4]தெரிந்ததோரார்
பொறைநிலத்தின்மிகும்புனிதர்காட்டும் எங்கள் -
பொன்றாதநன்னெறியிற்புகுதுவாரே. 52

1 பிரதானத்து
2 முருகநாவர்
3 நம்மை
4 சிறந்ததோர்வார், தெரிந்ததோர்வார்

இதுவழியின்னமுதென்றவர் இன்புலன்வேறிடுவார்
இதுவழியாமலவென்றறிவார் எங்கள்தேசிகரே
இதுவழிஎய்துகவென்று உகப்பாலெம்பிழைபொறுப்பார்
இதுவழியாமறையோரருளால் யாமிசைந்தனமே. 53

எட்டுமிரண்டுமறியாதவெம்மை இவையறிவித்து
எட்டவொண்ணுதவிடந்தரும் எங்களம்மாதவனுர்
முட்டவினைத்திரண்மாள முயன்றிடுமஞ்சலென்றூர்
கட்டெழில்வாசகத்தால் கலங்காநிலைபெற்றனமே. 54

* வானுளமர்ந்தவருக்கும் வருந்தவருநிலைகள்
தானுளனுயுகக்குந்தரம் இங்குநமக்குளதே !
கூனுளநெஞ்சுகளால் குற்றமெண்ணியிகழ்ந்திடினும்
தேனுளபாதமலர்த் திருமானுக்குத்தித்திக்குமே. 55

* வெள்ளைப்பரிமுகர்தேசிகராய் விரகால், அடியோம்-
உள்ளத்தெழுதியது ஓலையிலிட்டனம்யாமிதற்கென் ?
கொள்ளத்துணியினும் கோதென்றிகழினுங்கூர்மதியீர் !
எள்ளத்தனையுகவாது இகழாதெம்மெழில்மதியே. 56

அதிகாரசங்கிரகம் முற்றிற்று

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

---

அடிவரவு— பொய்கை, இன்பத்தில், என்னுயிர், ஆரணநூல், நீளவந்து, காளம்வலம், ஆளுமடை, திருவுடன் -

திருவுடன், புருடன், ஆராதவருள், கண்ணனடி, உத்தம, எட்டுமா, ஒண்டொடி, மூண்டாலும், சாதனமும், தன்னினைவில் -

தன்னினைவில், பாட்டுக்கு, உறுசகடம், மறையுரை, இதுவழி, எட்டுமிரண்டு, வானுள், வெள்ளை. மூலம் -

---

ஸ்ரீ:

# அமிருதாஸ்வாதினி

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

தனியன்

ராமாநுஜதயாபாத்ரம் ஜ்ஞாநவைராக்யபூஷணம் |
ஸ்ரீமத்வேங்கடநாதார்யம் வந்தே வேதாந்ததேசிகம் ||

சீரொன்று தூப்புல் திருவேங் கடமுடையான்
பாரொன்றச் சொன்ன பழமொழியுள்— ஓரொன்று
தானே அமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு
வானேறப் போமளவும் வாழ்வு.

---

* மூலங்கிளையென ஒன்றிரண்டானமொழியிரண்டும்
மேலொன்றிலையெனநின்ற அவ்வித்தகன்றன்னுரையும்
காலங்கழிவதன்முன்னம் கருத்துறக்கண்டிடவே
ஞாலம்புகழுநந்தேசிகர்தாம் நமைவைத்தனரே. 1

காரணமுங்காவலனுமாகி என்றுங்
　கமலையுடன்பிரியாதநாதனை
நாரணனுக்கடியேனடிமைபூண்ட
　நல்லடியார்க்கல்லான்மற்றொருவர்க்கல்லேன்
ஆரணங்கள்கொண்டகமும்புறமுங்கண்டால்
　அறிவாகியறிவதுமாயறுநான்கன்றிச்
சீரணிந்தசுடர்போலத்திகழ்ந்துநின்றேன்
　சிலைவிசயன்றேரனையசிறுவேதத்தே. 2

யானெனதென்பதொன்றில்லை என்செய்வதவனையல்லால்
ஆனதறிந்திடுந்தன்னடியார்க்கு எனையாட்படுத்தித்
தானெனைநல்கிநடத்துகின்றான் தன்னருள்வழியே
நானுனைவீடுசெய்வேனென்ற நந்திருநாரணனே. 3

யாதாமிவையனைத்தும் படைத்தேந்துமிறைவனுமாய்க்
கோதாங்குணங்களுடன் குறுகாதகுணத்தனுமாய்
மாதாபிதாவெனமன்னுறவாய்க் கதியென்னநின்றான்
போதார்திருவுடன் பொன்னருள்பூத்தநம்புண்ணியனே.

இருவிலங்குகழித்திடராமுடலந்தன்னில்
இலங்குநடுநாடியினுலெம்மைவாங்கி
ஒருவிலங்குநெறியல்லாவழியால் மன்னு -
முயர்வானிலேற்றியுயிர்நிலையுந்தந்து
பெருவிலங்காமருடன்னுல்தன்னடிக்கீழ்ப்
பிரியாத[1]வமரருடன்பிணைத்துத், தன்னு -
ருருவிலங்குமிசைவிக்கும்பர்போகம்
உகந்துதருந்திருமாலையுகந்தோநாமே. 5

உறவையிசைந்திறையில்லாவொருவர்க்கென்றும்
ஒண்சுடராயோரெழுத்திலோங்கிநின்றோம்
துறவறமுந்தூமதியுந்துயரந்தீர்வும்
தூயவர்கட்கானமையுமிரண்டினுற்றோம்
அறமுயனுமனைத்துறவாயனைத்துமேந்தும்
அம்புயத்தாள்கணவனைநாமணுகப்பெற்றோம்
பிறவியறுத்தடிசூடியடிமையெல்லாம்
பிரியாதவமரருடன்பெற்றோநாமே. 6

1 வகைபூணப்

கருமமெனஞானமெனவதனாற்கண்ட
உயிர்கவருங்காதலெனக்கானிலோங்கும்
அருமறையாற்றருநிலையிலிங்காளெல்லாம்
அடியேனையலையாதவண்ணமெண்ணித்
தருமமுடையாருரைக்கயானறிந்து
தனக்கென்றவடிமைக்காம்வாழ்ச்சிவேண்டித்
திருமகளோடொருகாலும்பிரியாநாதன்
திண்கழலேசேதுவெனச்சேர்கின்றேனே. 7

வினைவிடுத்துவியன்குணத்தாலெம்மையாக்கி
வெருவுரைகேட்டுஅவைகேட்கவிளம்பி, நாளுந் -
தனையனைத்துமடைந்திடத்தானடைந்துநின்ற
தன்றிருமாதுடனிறையுந்தனியாநாதன்
நினைவழிக்கும்வினைவழிக்குவிலக்காய்நிற்கும்
நிகரில்லாநெடுங்குணங்கள்நிலைபெறத், தன் -
கனைகழற்கீழடைக்கலமாக்காட்சிதந்து
காரணனுந்தன்காவல்கவர்கின்றானே. 8

என்னதியான்செய்கின்றேனென்றதாருக்கு
இன்னடிமைதந்தளிப்பான், இமையோர்வாழும் -
பொன்னுலகில்திருவுடனேயமர்ந்தநாதன்
புனலாரும்பொழிலரங்கந்திகழமன்னித்
தன்னகலமகலாததகவாலோங்கும்
தகவுடனேதன்கருமந்தானேயெண்ணி
அன்னையெனவடைக்கலங்கொண்டஞ்சல்தந்து என் -
னழலாறநிழலாரவளிக்கின்றானே. 9

ஒண்டொடியாள்திருமகளுந்தானுமாகி
  ஒருநினைவாலீன்றவுயிரெல்லாமுய்ய
வண்டுவரைநகர்வாழவசுதேவற்காய்
  மன்னவற்குத்தேர்ப்பாகனாகின்ற
தண்டுளவமலர்மார்பன்றானேசொன்ன
  தனித்தருமந்தானெமக்காய்த், தன்னையென்றுங்-
கண்டுகளித்தடிசூடவிலக்காய்நின்ற
  கண்புதையல்விளையாட்டைக்கழிக்கின்றானே. 10

துய்யமனத்தர்துறையணுகாத
துணையிலியேன்
ஐயமறுத்து உனதாணைகடத்த -
லகற்றினைநீ
கையமர்சக்கரக்காவல! காக்கும் -
திருவருளால்
வையமளந்தவடிக்கீழ் அடைக்கலம் -
வைத்தருளே. 11

அறியாதவிடைச்சியருமறியும்வண்ணம்
  அம்புயத்தாளுடனந்நாளவதரித்த
குறையாதுமில்லாதகோவிந்தா! நின் -
  குரைகழற்கீழடைக்கலமாங்குறிப்புத்தந்தாய்
வெறியாருமலர்மகளுநீயும் விண்ணில் -
  விண்ணவர்களடிசூடவிருக்குமேன்மை
குறையாதவினையகற்றியடிமைகொள்ளக்
  குறுகவொருநன்னாள்நீகுறித்திடாயே. 12

தத்துவமுஞ்சாதனமும்பயனுங்காட்டும்
　　தாரமுதலிருநான்கும், தன்கருத்தால் -
முத்திவழிநாமுயலும்வகையேகாண
　　முகுந்தனிசைத்தருள்செய்தவைந்நாலைந்தும்
பத்திதனிற்படியில்லார்பரஞ்சமத்தப்
　　பார்த்தன்றேர்முன்னேதாந்தாழநின்ற
உத்தமனுருத்தமநல்லுரைநாலெட்டும்
　　உணர்ந்தவர்தாமுகந்தெம்மையுணர்வித்தாரே. 13

பரக்கும்புகழ்வரும் பைம்பொருள்வாய்த்திடும்,
　　பத்தர்களாய் -
இரக்கின்றவர்க்கிவையீந்தால் அறமுள -
　　தென்றியம்பார்
கரக்குங்கருத்துடைத்தேசிகர் கன்றென -
　　நம்மையெண்ணிச்
சுரக்குஞ்சுரவிகள்போல் சொரிகின்றனர் -
　　சொல்லமுதே. 14

சோகந்தவிர்க்கும் சுருதிப்பொருளொன்று -
　　சொல்லுகின்றோம்
'நாகந்தனக்குமிராக்கதற்கும் நமக் -
　　குஞ்சரணும்
ஆகண்டலன்மகனாகிய ஆவலிப் -
　　பேறிய, ஓர் -
காகம்பிழைத்திடக் கண்ணழிவேசெய்த -
　　காகுத்தனே.' 15

'ஒருக்காலேசரணாகவடைகின்றாற்கும்
உனக்கடிமையாகின்றேனென்கின்றாற்கும்
அருக்காதேயனைவர்க்குமனைவராலும்
அஞ்சேலென்றருள்கொடுப்பன், இதுதானேதும்-
இருக்காலுமெழின்முனிவர்நிலைவினாலும்
இவையறிவார்செய்யுடனொன்னிசையினாலும்
நெருக்காதநீள்விரதமெனக்கொன்'றென்னும்
நெறியுரைத்தார்நிலையுணர்ந்துநிலைபெற்றோமே. 16

பொன்னையிகழ்ந்துவிருகங்கள் புல்லிய -
புல்லுகந்தால்
மன்னரெடுப்பது அப்பொன்னலதே ?, மன் -
னுலகனைத்துந் -
தன்னையடைந்திடத் தானருள்செய்யுந் -
தனிச்சிலையோன்
பொன்னடிநாமடைந்தோம் [1]புறமாரென்கொல் -
செய்திடினே ? 17

வேதத்திரளின்விதியுணர்ந்தோர்கள்
விரித்துரைத்த
காதற்கதியையும் ஞானத்தையுங்கரு -
மங்களையும்
சாதிக்கவல்லசரண[2]கதி தனி -
நின்றநிலை
ஓதத்தொடங்கும் எழுத்தின் திறத்தி -
லுணர்மின்களே. 18

1 புறமாறென் 2 கதிதனிநின்ற

மூவுலகுந்தன்பிழையைத்தானேசாற்ற
முனிவர்களுந்தேவர்களுமுனிந்தவந்நாள்
தாவரிதாயெங்கும்போய்த்தளர்ந்துவீழ்ந்த
தனிக்காகந்தானிரந்தவுயிர்வழங்கிக்
காவலினியெமக்கெங்குங்கடனென்றெண்ணிக்
காணகிலையிலச்சினையன்றிட்டவள்ளல்
ஏவல்பயனிரக்கமிதற்காறென்றோதும்
எழிலுடையாரிணையடிக்கீழிருப்போநாமே. 19

'திருத்தம்பெரியவர்சேருந்துறையில் செறிவிலர்க்கு
வருத்தங்கழிந்த வழியரு'ளென்றநம்மண்மகளார்
கருத்தொன்ற ஆதிவராகமுரைத்தகதியறிவார்
பொருத்தந்தெளிந்துரைக்கப் பொய்யிலாமதிபெற்றனமே.

'இடம்பெற்றாரெல்லாமென்னுடலாய்நிற்ப
இடர்பிறப்பென்றிவையில்லாவென்னையன்பால்
அடம்பற்றுமவனென்றுசரிந்தான்யாவன்
அவனுவிசரியும்போதறிவுமாறி
உடம்பிற்றுனுபலம்போற்கிடக்க நானே -
உய்யும்வகைநினைந்துயர்ந்தகதியால், என்றன் -
இடம்பெற்றென்னுடன்வாழவெடுப்ப'னென்ற
எம்பெருமானருள்பெற்றுமருள்செற்றோமே. 21

இரண்டுரையாத நம்மேனமுரைத்தவுரையிரண்டின்
திரண்டபொருள்கள்தெளிந்து அடிசூடினந்திண்ணருளால்
சுருண்டநம்ஞானச்சுடரொளி சுற்றும்பரப்பதன்முன்
புரண்டதுநம்வினை போமிடம்பார்த்தினிப்போமளவே. 22

மலையுங்குலையுமென்றெண்ணியும் வன்பெரும்புண்திரங்கித்
தலையும்வெளுத்தபின் தானேயழியவிசைகின்றிலீர் !
அலையுங்கடல்கொண்ட வையமளித்தவன்மெய்யருளே
நிலையென்றுநாடி நிலைநின்றபொய்ம்மதிநீக்குமினே. 23

கண்ணன்கழல்தொழக் கூப்பியகையின்பெருமைதனை
எண்ணங்கடக்க எமுனைத்துறைவரியம்புதலால்
திண்ணமிதுவென்று தேறித்தெளிந்தபின் , சின்மதியோர்-
பண்ணும்பணிதிகள்பாற்றிப் பழந்தொழில்பற்றினமே.

பொங்குபுனலாறுகளிற்புவனமெல்லாம்
பொற்கழலாலளந்தவன்றன்தாளால்வந்த
கங்கையெனுநதிபோலக்கடல்களேழில்
கமலைபிறந்தவனுகந்தகடலேபோலச்
சங்குகளிலவனேந்துஞ்சங்கேபோலத்
தாரிலவன்தண்டுளவத்தாரேபோல
எங்கள்குலபதிகளிவைமேலாமென்றே
எண்ணியநல்வார்த்தைகள்நாமிசைகின்றோமே. 25

சீர்க்கடலின்திரையென்னத்தகவால்மிக்க
தேசிகராய்த்திண்ணிருளாங்கடலைநீக்கிப்
பாற்கடலோன்திருவணையாய்நின்று பாரங் -
காணுதபவக்கடலைக்கடத்துகின்றான்
ஈர்க்குமரக்கலமென்ன இறைவரின்பம்
எழுந்தழியுங்குமிழியெனவிகந்தொழிந்தோம்
ஆர்க்கினிநாமென்கடவோநமக்குமாரென் -
கடவாரென்று அடைந்தவர்கட்கறிவித்தோமே.

❋ [1]காசினியொண்மணியனைத்துங்காயாவண்ணன்
கடைந்தெடுத்தகவுத்துவத்தின்சீர்மைக்கொவ்வா
காசிமுதலாகியநன்னகரியெல்லாம்
கார்மேனியருளாளர்கச்சிக்கொவ்வா
மாசின்மனந்தெளிமுனிவர்வகுத்தவெல்லாம்
மாலுகந்தவாசிரியர்வார்த்தைக்கொவ்வா
வாசியறிந்திவையுரைத்தோம்வையத்துள்ளீர் !
வைப்பாகவிவைகொண்டுமகிழ்மினீரே. 27

❋ அந்தமிலாப்பேரின்பமருந்தவேற்கும்
அடியோமையறிவுடனேயென்றுங்காத்து
முந்தைவினைநிரைவழியிலொழுகாதெம்மை
முன்னிலையாந்தேசிகர்தமுன்னேசேர்த்து
மந்திரமுமந்திரத்தின்வழியுங்காட்டி
வழிப்படுத்திவானேற்றியடிமைகொள்ளத்
தந்தையெனநின்றதனித்திருமால்தாளில்
தலைவைத்தோஞ்சடகோபனருளினாலே. 28

தான்தனக்குத்தன்னாலேதோன்றித் தன்னோர் -
ஒளியணைக்குங்குணத்தாலுந்தன்னைக்கண்டு
தான்தனக்கென்றறியாததன்குணத்தைத்
தன்குணத்தால்தானிறையில்தானேகூட்டி
ஊன்மருத்துப்புலன்மனமாங்காரங்கள்
ஒருமூலப்பிரகிருதியன்றிநின்ற
நான்தனக்குத்தான்தனக்கென்றிசைவுதந்த
நாரணனைநான்மறையால்நான்கண்டேனே. 29

1 காசினியில் வரை

கழியாத கருவினையிற்படிந்த நம்மைக்
காலமிதுவென்றொருநாற்காவல்செய்து
பழியாத நல்வினையிற்படிந்தார் தாளில்
பணிவித்துப்பாசங்களடையநீக்கிச்
சுழியாத செவ்வழியில்துணைவரோடே
தொலையாதபேரின்பந்தரமேலேற்றி
அழியாதவருளாழிப்பெருமான்செய்யும்
அந்தமிலாவுதவியெலாமளப்பாராரே? 30

❋ நின்னருளாங்கதியன்றிமற்றொன்றில்லேன்
நெடுங்காலம்பிழைசெய்தநிலைகழிந்தேன்
உன்னருளுக்கினிதானநிலையுகந்தேன்
உன்சரணேசரணென்னுந்துணிவுபூண்டேன்
மன்னிருளாய்நின்றநிலையெனக்குத்தீர்த்து
வானவர்தம்வாழ்ச்சிதரவரித்தேனுன்னை
இன்னருளாலினியெனக்கோர்பரமேற்றாமல்
எந்திருமால்! அடைக்கலங்கொளென்னைநீயே. 31

பரவுமறைகளெலாம் பதஞ்சேர்ந்தொன்ற -
நின்றபிரான்
இரவன்றிரவியின்காலத்தழைத்த
எழிற்படையோன்
அரவுங்கருடனுமன்புடனேந்தும்
அடியிரண்டும்
தரவெந்தமக்கருளால் தளராமனந் -
தந்தனனே. 32

*அலர்ந்தவம்புயத்திருந்துதேனருந்தி இன்னகல் -
அல்குலாரசைந்தடைந்தநடைகொளாததனமெனோ ?
கலந்தவிர்ந்தகால்அதென்கொல்?நாவின்வீறிழந்ததால்
நாவணங்குநாதர்தந்தநாவின்வீறிழந்ததென் ?
கலந்தவிர்ந்துவாதுசெய்துசாடிமூண்டமிண்டரைச்
சரிவிலேலொலாக்கனைத்துரைத்தவேதிராசர்தம்
வலந்தருங்கைநாயனூர்வளைக்கிசைந்தகீர்த்தியால்
வாரிபாலதாமதென்றுமாசில்வாழிவாழியே. 33

சடையன்திறலவர்கள் பெருஞானக் -
கடலதனை
இடையறாதுகடக்கினும் ஈதள -
வென்றறியார்
விடையுடனேழன்றடர்த்தவன் மெய்யருள் -
பெற்றநல்லோர்
அடையவறிந்துரைக்க [1]அடியோமு -
மறிந்தனமே. 34

பாவளருந்தமிழ்மறையின்பயனேகொண்ட
பாண்பெருமாள்பாடியதோர்பாடல்பத்தில்
காவலனுங்கணவனுமாய்க்கலந்துநின்ற
காரணனைக்கருத்துறநாங்கண்டபின்பு
கோவலனுங்கோமானுமானவந்நாள்
குரவைபிணைகோவியர்தங்குறிப்பேகொண்டு
சேவலுடன்பிரியாதபெடைபோற்சேர்ந்து
தீவினையோர்தனிமையெலாந்தீர்ந்தோநாமே. 35

1 'கல்வடி' என்று விரித்தல் கொண்டு அலகிடுக

✻ ஆதிமறையெனவோங்குமரங்கத்துள்ளே
அருளாருங்கடலைக்கண்டவன்நம்பாணன்
ஓதியசொற்றொருநான்குமிரண்டுமான
ஒருபத்தும்பற்றாகவுணர்ந்துரைத்தோம்
நீதியறியாதநிலையறிவார்க்கெல்லாம்
நிலையிதுவேயென்றுநிலைநாடிநின்றோம்
வேதியர்தாம்விரித்துரைக்கும்விளைவுக்கெல்லாம்
விதையாகுமிதுவென்றுவிளம்பினோமே. 36

✻ காண்பனவுமுரைப்பனவுமற்றொன்றின்றிக்
கண்ணனையேகண்டுரைத்த, கடியகாதற் -
பாண்பெருமாளருள்செய்தபாடல்பத்தும்
பழமறையின்பொருளென்றுபரவுகின்றோம்
வேண்பெரியவிரிதிரைநீர்வையத்துள்ளே
வேதாந்தவாரியனென்றியம்புகின்றோம்
நாண்பெரியோமல்லோம்நாம் நன்றுந்தீதும் -
நமக்குரைப்பாருளரென்றுநாடுவோமே. 37

## அமிருதாசுவாதினி முற்றிற்று

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

---



---

ஸ்ரீ:

# பரமபதசோபானம்

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

தனியன்

ராமாநுஜதயாபாத்ரம் ஜ்ஞாநவைராக்யபூஷணம் |
ஸ்ரீமத்வேங்கடநாதார்யம் வந்தே வேதாந்ததேசிகம் ||

சீரொன்று தூப்புல் திருவேங் கடமுடையான்
பாரொன்றச் சொன்ன பழமொழியுள் — ஓரொன்று
தானே யமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு
வானேறப் போமளவும் வாழ்வு.

வ்யாஜீக்ருத்ய விசித்ரபோகவிபவவ்யாவர்ணநம்
ஸம்ஸாரார்ணவமஜ்ஜதாமிஹ ய: ஸ்வாதீநஸத்வாஸ்ரய: |
தஸ்மிந் திஷ்டதி வேங்கடேஸ்வரகவௌ ஸ்ரீபாஷ்யகாரோபமே
யங்கஸ்சித்ப்ரேக்ஷம் ஸ்வாவஸிதம் ஸமயோ ராமாநுஜ: ஸ்வஸ்திதே ||

தஸ்மை நமஸ்க்ருதே ஸ்ரீமதே
தாத்ருஸவிஷயாய வேங்கடேஸாய |
ஸ்வாதந்த்ர்யஜ்ஞாநாநாம்
ஸீமாந வரதவேதஸஸம்வாதாந் ||

தேனேறு தாமரையாள் திருமார் பன்றன்
றிண்ணருளா லவனடியில் விவேகம் பெற்றிங்
கூனேறு பவக்குழியை வெறுத்த தற்பின்
னூர்விரத்தி யுடன்வினையின் றிரளுக் கஞ்சிக்
கூனேறு பிறையிறையோன் சாபந் தீர்த்தான்
குரைகழலே சரணடைந்து குரம்பை விட்டு
வானேறும் வழிப்படிக ளடைவே கண்ட
வண்புகழ்த்தூப் புல்வள்ள லருள்பெற் றோமே.

* அடற்புள்ளரசினும் அத்தனார்மட்டினும்,
இன்னமுதக் -
கடற்பள்ளிகன்னினும் காவிரியுள்ள -
முகத்திரான்
இடைப்பிள்ளையாகி உரைத்ததுரைக்கும்,
எதிவரனார் -
மடைப்பள்ளிவந்தமணம் எங்கள்வார்த்தையுள் -
மன்னியதே. 1

கள்ளமனத்துடன் கண்டுமுயன்றகடுவினையால்
நள்ளிருளாழியில் நற்சுவையைத்தெனநாடிய, ஓர் -
அள்ளலில்நாளும் விழுந்தழியாவகை, ஆரணநூல் -
வள்ளல்வழங்கிய வான்படியானவழியிதுவே. 2

அருவுருவானவையனைத்துமறிவாரேனும்
அருங்கலைகள்கற்றுரைக்கவல்லாரேனும்
தருமவழியழியாமற்காப்பாரேனும்
தனிமறையின்தாற்பரியந்தருவாரேனும்
இருவினையினெழுக்கத்தாலேவலோராது
இங்கேநாஞ்சிறையிருந்தவீனந்தீர்க்கும்
திருமகளார்பிரியாததேவன்திண்ணம்
தேறாதார்திண்படியிலேறாதாரே. 3

மறுத்தார்திருவுடன் மார்பில்தரித்தவன்வாசகத்தை
மறுத்தார்மயக்கமும் மற்றதனால்வந்தமாநரகும்
நிறுத்தார்பவத்தில் நெடுநாளுழன்றமைகண்டதனால் -
வெறுத்து, ஆரணநெறியே வெள்கியோடவிரைவர்களே.

வான்பட்டமன்னிருளில்மயங்குமாறும்
  மறித்தொருகாலலையூழிசென்றால், அன்றோர் -
ஊன்பட்டவுடலாழிவினையொழுக்கில்
  ஒருகரையுங்காணதேயொழுகுமாறும்
தேன்பட்டவிடம்போலத்தித்திக்கின்ற
  சிறுபயனையுறுபயனென்றருந்துமாறும்
தான்பட்டபடியிந்நேர்தானேகண்டு
  தளர்ந்திடுமேல்வளர்ந்திடுமேதக்கவாறே. 5

உலகத்துயர்ந்தவர் ஒன்றும்பயனிலுறுந்துயரும்
அலகிற்படாத அப்போகங்கவர்ந்தெழும்புயத்தோன்
கலகத்தொழில்மதுகைடபரால் படுங்கட்டமெண்ணில்
பலகற்றமெய்யடியார் படியாரிக்கடும்பவத்தே. 6

தந்திரங்களளவிலராய்த்தனத்தால்மிக்க
  தார்வேந்தர்தொழவையமாண்டார்மாண்டார்
சந்திரனுஞ்சூரியனும்வீயுங்காலம்
  தாரகையின்வடமுமற்றுத்தனிவானுகும்
இந்திரனுமேறுயர்த்தவீசன்றானும்
  ஈரிரண்டுமுகத்தானுமில்லாவந்நாள்
நந்திருமால்நிலைகண்டார்நாகமெல்லாம்
  நரகென்றுநற்பதமேநாடுவாரே. 7

துறவறமேதுணிவார் துணுக்கற்றவிளந்துணிவோர்
உறவிலராதலின் நாமுயர்ந்தாருடனென்றிநின்றோம்
மறவழிமாற்றி எம்மையிலைத்தீர்த்தவர்மன்னருளால்
கறவையுகந்தபிரான் கழல்சூடுங்கருத்தினமே. 8

வந்தனபோல்வருவனவுமனந்தமாகி
மாளாததுயர்தருவல்வினைநெருப்புக்கு
இந்தனமாயெண்ணிறந்தகாலமெல்லாம்
இன்னமுமிப்பவக்குழிக்கேயிழியாவண்ணம்
வெந்தநொருகுழவியைநற்குமரனாக்கும்
வெறித்துளவவித்தகனார்விதியேகொண்டார்
பந்தனமாமவையனைத்தும்பாறுகைக்குப்
பழமறையின்பரமநெறிபயிலுவாரே. 9

கருமாலையில்வரும் கட்டங்கழிக்குங்கருத்துடையார்
ஒருமால்பெருகும் உயோகில்முயன்றும், அதன்றியுநக் -
திருமாலடியிணை திண்சரணாகுமெனவரித்தும்
தருமாலினியவைதானேயெனத் தகவெண்ணுவரே. 10

முன்செய்தவினைத்திரளில்முளைத்ததன்றி
முற்றுள்ளமுதலரிந்துமுளைத்தகூற்றில்
தன்செய்யதிருவருளாலிசைவுபார்த்துத்
தழல்சேர்ந்ததூலமெனத்தானேதீர்த்துப்
பின்செய்தவினையில்நினைவொன்றுதொன்றும்
பிழைபொறுத்துவேறுளதுவிரகால்மாற்றும்
என்செய்யதாமரைக்கட்பெருமானெண்ணம்
எண்ணாதாரெட்டிரண்டுமெண்ணாதாரே. 11

உறையிட்டவாளென ஊனுளுறையுமுயோகியரை
நறைமட்டொழிவற்ற நற்றுளவேந்தியநாயகன்றான்
நிறைமட்டிலாத நெடும்பயன்காட்டநினைந்து , உடலச் -
சிறைவெட்டிவிட்டு வழிப்படுத்தும்வகைசெய்திடுமே. 12

மூன்கருவியீரைந்தும்மனத்திற்கூட்டி
முக்கியமாமருத்திலவைசேர்த்து, அதெல்லாம்
நன்குணருமுயிரினிற்சேர்த்து ஐம்பூதத்தை -
நண்ணுவித்துத்தான்தன்பால்வைக்குநாதன்
ஒன்பதுடன்வாசலிரண்டுடைத்தாயுள்ளே
ஒருகோடிதுயர்விளைக்குமுடம்பாயொன்றும்
வன்சிறையின்தலைவாசல்திறந்து நம்மை -
வானேறவழிப்படுத்தமனமுற்றானே. 13

தெருளார்பிரமபுரத்திறைசேர்ந்து இடர்தீர்ந்தவர்தாம்
மருளார்பிரமபுரச்சிறைதீர்ந்தபின் வந்தெதிர்கொண்டு
அருளாலமரர்நடத்த இம்மாயைகடந்ததற்பின்
சுருளார்பவநரகச்சுழலாற்றின்சுழற்சியிலே. 14

விழியல்லால்வேலில்லைவிண்ணின்மாதர்
மேனியல்லால்வில்லில்லைமீனவற்கு
மொழியல்லாலமுதில்லையென்றுமுன்னாள்
முக்திவழிமுனிந்தடைந்தமோகந்தீர்ந்தோம்
கழியல்லாற்கடலில்லையென்பார்போலக்
காரியமேகாரணமென்றுரைப்பார்காட்டும்
வழியல்லாவழியெல்லாங்கடந்தோம் மற்றும் -
வானேறும்வழிகண்டோம்மகிழ்ந்திட்டோமே. 15

வன்பற்றுடன்மயல்பூண்டு மற்றோர்கதியால், இனநாள் -
என்பெற்றது? பெறுந்தானமுமெத்தனைபோதுளதாம்?
துன்பற்றதன்துணிவால் துயர்தீர்க்குந்துழாய்முடியான்
இன்புற்றநல்வழியால் ஏற்றுநற்பதமெண்ணுவமே. 16

பண்டைப்பிறவிவினையாற்றிற்படிந்து பாரங் -
காணாதேயொழுகியநாம்பாக்கியத்தால்
வண்டமருமலர்மாதர்பின்னாய்மன்னா
வைசயந்திமணிவில்லாய்விளங்க, வான்சேர் -
கொண்டலருள்மழைபொழியவந்ததொப்பாம்
குளிர்ந்துதெளிந்தமுதாயவிரசையாற்றைக்
கண்டுருகிக்கருத்தாலேகடந்து மீளாக் -
கரைகண்டோர்கதியெல்லாங்கதித்திட்டோமே. 17

பூவளருந்திருமாதுபுணர்ந்த நம்புண்ணியனார்
தாவளமானதனிக்கிடஞ்சேர்ந்து தமருடனே
நாவளரும்பெருநான்மறையோதிய கீதமெலாம்
பாவளருந்தமிழ்ப்பல்லாண்டிசையுடன்பாடுவமே. 18

அடலுரகமுண்டுமிழ்ந்தவருக்கன்போல
அழுக்கடைந்துகழுவியநற்றரளம்போலக்
கடலொழுகிக்கரைசேர்ந்தகலமேபோலக்
காட்டுத்தீக்கலந்தொழிந்தகளிறேபோல
மடல்கவருமயல்கழிந்த'மாந்தர்போல
வன்சிறைபோய்மன்னர்பதம்பெற்றார்போல
உடன்முதலாவுயிர்மறைக்கும்மாயைநீங்கி
உயர்ந்தபதமேறியுணர்ந்தொன்றினோமே. 19

* மண்ணுலகில்மயல்தீர்ந்துமனந்தநும்பி
மன்னுதபயனிகந்து, மாலேயன்றிக் -
கண்ணிலதென்றஞ்சியவன்கழலேபூண்டு
கடுஞ்சிறைபோய்க்கரையேறுங்கதியேசென்று
விண்ணுலகில்வியப்பெல்லாம்விளங்கக்கண்டு
விண்ணவர்தங்குழாங்களுடன்வேதம்பாடிப்
பண்ணுலகிற்படியாதவிசையாற்பாடும்
பல்லாண்டேபல்லாண்டும்பாடுவோமே. 20

* மாளாதவினையனைத்தும்மாளநாம்போய்
வானேறிமலர்மகளாரன்புபூணும்
தோளாதமாமணிக்குத்தொண்டுபூண்டு
தொழுதுகந்துதோத்திரங்கள்பாடியாடிக்
கேளாதபழமறையின்கீதங்கேட்டுக்
கிடையாதபேரின்பம்பெருகநாளும்
மீளாதபேரடிமைக்கன்புபெற்றோம்
மேதினியிலிருக்கின்றோம்விதியினாலே. 21

## பரமபதசோபானம் முற்றிற்று

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

---

அடிவரவு— அடற்புள், கள்ளமன, அருவுரு-அனைந்தும், மறுத்தார், வாண்பட்ட, உலகத்து, தந்திரங்களனைவர், துறைமறமே, வந்தன, கருமாலை, முன்செய்த.

முன்செய்த, உறையிட்ட, மூன்கருவி, தெருளார், வழியல்லால், வன்பற்றுடன், பண்டையிரு, பூவளரும், அடலூரகம், மண்ணுலகில், மாளாத, என்பன.

---

ஸ்ரீ:

# பரமதபங்கம்

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

தனியன்

ராமாநுஜதயாபாத்ரம் ஜ்ஞாநவைராக்யபூஷணம் ।
ஸ்ரீமத்வேங்கடநாதார்யம் வந்தே வேதாந்ததேசிகம் ॥

சீரொன்று தூப்புல் திருவேங் கடமுடையான்
பாரொன்றச் சொன்ன பழமொழியுள்— ஓரொன்று
தானே அமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு
வானேறப் போமளவும் வாழ்வு.

* எண்டளவம்புயத்[1]துள் இலங்கும்மறு -
கோணமிசை
வண்பணிலந்திகிரி வளைவில்வளை -
வாய்முசலம்
திண்கையிலங்குசம் சீர்திகழுங்கதை -
செங்கமலம்
எண்படையேந்திநின்றான் எழிலாழி -
யிறையவனே. 1

1 'துள்ளிலங் கும்மறு' என அலகிடுக

விடுநெறியஞ்சிவிடத்தொடக்கிய
விதியரடைந்துதொழத்தழைத்தெழு
விழியருள்தந்துவிலக்கடிக்களை
விரகிலியம்பிவிலக்கிவைத்தனர்

கொடுவினையென்பதனைத்தினைத்தனை
கொணர்தலிகழ்ந்தகுணத்தனத்தினர்
குருகையில்வந்துகொழுப்படக்கிய
குலபதிதந்தகுறிப்பில்வைத்தனர்

கதிகரகன்புகழற்றிமற்றொரு
கதிபெறுமன்பிலெமைப்பொருத்தினர்
கமலையுகந்தகடற்கிடைக்கடல்
கருணையுயர்ந்ததிடர்க்கொருக்கினர்

படுமுதலன்றிவளர்த்தநற்கலை
பலபலவொன்றவெமக்குரைத்தனர்
பழமறையந்திநடைக்கிடைச்சுவர்
பரமதமென்றதிடித்தபத்தரே. 2

போமுரைக்கும்பொருள்யாமறியோம் பொருளார்மறையில்
தாமுரைக்கின்றன தாமேயறியுந்தரமுடையார்
ஆமுரைக்கென்றிவையாய்ந்தெடுத்து ஆரணநூல்வழியே
நாமுரைக்கும்வகை நல்லருளேந்திநவின்றனரே. 3

சித்துமசித்துமிறையுமெனத் தெளிவுற்றுநின்ற
தத்துவமூன்றும் தனித்தனிகாட்டுந்தனிமறையால்
முத்திவழிக்கிதுமூலமெனத் துணிவார்களையும்
கத்திமயக்குங்கதகரை நாங்கடிகின்றனமே. 4

முத்தின்வடங்களென முகுந்தன்[1]புனைமூவகையாம்
சித்திலருஞ்சுருதிச்செவ்வைமாறிய சிந்தைகளால்
[2]பத்திலிரண்டுமெய்க்கப் பகட்டும்பரவாதியர்தம்
கத்தில்விழுந்தடைந்த [3]அழுக்கின்றுகழற்றினமே. 5

நாக்கியனும்வகை நம்மையளித்தவர்நல்லருளால்
பாக்கியமேந்திப் பரனடியார்திறம்பார்த்ததற்பின்
தாக்கியர்தங்கள்தலைமிசைதாக்கித் தனிமறைதான்
போக்கியமென்றதனில் பொய்ம்மதங்களைப்போக்குவமே.

தீவகைமாற்றி அன்றோர்தேரிலாரணம்பாடிய, நம்-
தேவகிசீர்மகனார் திறம்பாவருள்சூடியநாம்
மூவகையாமறியாத்தத்துவத்தின் முகமறிவார்
நாவகையேநடத்தும் நடைபார்த்துநடந்தனமே. 7

வேலைப்புறமகங்காண்பதுபோல் வேதநன்னெறிசேர்
நூலைப்புறமகங்காண்டலில் நுண்ணறிவின்றிநின்றீர் !
மாலைப்பெறவழிகாட்டிய தேசிகர்வாசகமே
ஓலைப்புறத்திலெழுதுகின்றோம் உள்ளெழுதுமினே. 8

சிறைநிலையாம்பவத்தில் சிறுதேனின்பமுண்டுழல்வார்
மறைநிலைகண்டறியா மயல்மாற்றியமன்னருளே
துறைநிலைபாரமெனத் துளங்காவமுதக்கடலாம்
இறைநிலையாமுரைத்தோம் எங்குருக்களியம்பினவே. 9

1 பூண்ட 2 பற்றி 3 'தவ்வழுக்' என விரித்தல்கொண்டு அலகிடுக

வெறியார் துளவுடைவித்தகன் தன்மையின் மெய்யறிவார்
குறியார்நெடியவரென்று ஒருகுற்றம்பிறர்க்குரையார்
அறியார்திறத்திலருள்புரிந்து ஆரணநன்னெறியால்
சிறியார்வழிகளழிப்பதும் தீங்குகழிப்பதற்கே. 10

மிண்டுரைக்கவிரகுதருந்தருக்கங்கொண்டே
வேண்டுங்கால்வேண்டுவதேவிளம்புகின்றார்
கண்டதற்குவிபரீதங்கத்துகின்றார்
காணாதகுறைமறையிற்காட்டநிற்பார்
பண்டொருத்தன்கண்டுரைத்தேன்நானேயென்னப்
பலவகையிலுபாதிகளாற்படிந்துவீழ்வார்
கொண்டலொக்குந்திருமேனிமாயக்கூத்தன்
குரைகழல்சேர்விதிவகையிற்கூடாதாரே. 11

கண்டதுமெய்யெனில் காணுமறையிலறிவுகண்டோம்
கண்டதலாததிலதெனில் கண்டிலங்குற்றமிதில்
கண்டதுபோல்மறைகாட்டுவதும் கண்டதொத்ததனால்
[1]விண்டதுகேட்கும் உலோகாயதரின்றுமீறுவதே ? 12

கண்டதனாற்காணாததனுமிக்கின்றார்
கண்டொருத்தனுரைத்ததனைக்கவருகின்றார்
உண்டுபசிகெடுமென்றேயுணர்ந்துண்கின்றார்
ஒன்றாலேயொன்றைத்தாஞ்சாதிக்கின்றார்
பண்டுமுலையுண்டதனால்முலையுண்கின்றார்
பார்க்கின்றார்பலரல்லாத்தம்மைமற்றும்
கண்டுமதிகெட்டநிலைகாணகில்லார்
காணாததிலதென்றுகலங்குவாரே. 13

காணுதிலதெனுங்கல்வியினுரைக் கடிந்ததற்பின்
கோணுர்குதர்க்கங்கள்கொண்டே குழப்பும்பவுத்தர்களில்
நாணுதனைத்துமிலதென்றும் நால்வகையன்றிதென்றும்
வாணுளறுக்கின்ற மத்திமத்தான்வழிமாற்றுவமே. 14

மானமிலேமேயமிலேயென்றும் மற்ருேர் -
வாதநெறியிலேயென்றும்வாதுபூண்ட
தானுமிலேதன்னுரையும்பொருளுமில்லே
தத்துவத்தினுணர்த்திசயமில்லேயென்றும்
வானவருமானவருமனமும்வெள்க
வளம்பேசுமதிகேடன்மத்திமத்தான்
தேனநெறிகொண்டனைத்துந்திருடாவண்ணம்
செழுமதிபோலெழுமதியாற்சேமித்தோமே. 15

முற்றுஞ்சகத்திலதென்றே பகட்டியமுட்டரை, நாம் -
சுற்றுந்துறந்து துறையில்நின்றேதுகளாக்கியபின்
மற்ருென்றிலதுமதிபலவுண்டென்று வஞ்சனையால்
[1]சற்றுந்துறந்த யோகாசாரனைச்சதிக்கின்றனமே. 16

உளக்கதியைநாமுள்ளியுள்ளந்தேறி
உலகத்தாருகந்திசையவுலகுண்டென்ருேம்
இளக்கவரிதாகியநற்றருக்கஞ்சேர்ந்த
எழின்மறையிலீசனுடனெம்மைக்கண்டோம்
விளக்குநிரைபோல்மதிகள்வேருய் வேருென் -
றறியாதேவிளங்குமெனவிளம்புகின்ற
களக்கருத்தன்கண்ணிரண்டுமழித்தோம் நாணுக் -
காகம்போல்திரிந்தவனென்கதறுமாறே ? 17

1 சத்துங்

பொருளொன்றிலதென்று போதமொன்றுங்கொண்ட -
பொய்யரை, நாம் -
தெருள்கொண்டுதிர்த்தபின் காணவொண்ணுப்பொருள்-
தேடுகின்ற
மருள்கொண்டசூதுரைக்கும் சௌத்திராந்திகன் -
வண்ணிக்கைநாம்
இருள்கொண்டபாழ்ங்கிணறென்று இகழ்ந்தோட -
வியம்புவமே. 18

நிலையில்லாப்பொருள்மதியைவிளைத்துத் தான்சேர் -
நிறங்கொடுத்துத்தானழியும், தன்னல்வந்த -
நிலையில்லாமதிதன்னில்நிறத்தைக்காணும்
இதுகாணும்பொருள்காண்கையென்றநீசன்
முலையில்லாத்தாய்கொடுத்தமுலைப்பாலுண்ணும்
முகமில்லாமொழியெனவேமொழிந்தவார்த்தை
தலையில்லாத்தாளருங்கணக்காய்நின்ற
கட்டவிநாங்கண்டின்றுகாட்டினேமே. 19

காண்கின்றவனில்லை காட்சியுங்கண்டது -
முண்டு, அவைதான் -
ஏண்கொண்டனவன்று இவற்றிற்குணமு -
நிலையுமில்லை
சேண்கொண்டசந்ததியால் சேர்ந்துமொன்றென -
நிற்குமென்ற
கோண்கொண்டகோளுரை வைபாடிகன்குறை -
கூறுவமே. 20

கும்பிடுவாராரென்றுதேடுகின்றார்
குணங்களையுந்தங்களுக்குக்கூறுகின்றார்
தம்படியைத்தமர்க்குரைத்துப்படிவிக்கின்றார்
தமக்கினிமேல்வீடென்றுசாதிக்கின்றார்
தம்புடவையுணல்குறித்துநெடிதெண்கின்றார்
சந்ததிக்குத்தவம்பலிக்கத்தாம்போகின்றார்
செம்படவர்செய்கின்றசிற்றினிப்பைச்
சேவகப்பற்றுடனேநாஞ்செகுத்திட்டோமே. 21

வேதங்கள்மௌலிவிளங்க வியாசன்விரித்தநன்னூல்
பாதங்களானபதினாறில் ஈசன்படிமறைத்துப்
பேதங்களில்லையென்று ஓர்பிரமப்பிச்சியம்புகின்ற
போதங்கழிந்தவனைப் புத்தர்மாட்டுடன்பூட்டுவமே. 22

பிரிவில்லாவிருளொன்றுபிணக்கொன்றில்லாப்
பெருவெயிலைமறைத்துலகங்காட்டுமென்ன
அறிவில்லாவறிவொன்றையவித்தைமூடி
அகம்புறமென்றிவையனைத்துமமைக்குமென்பார்
செறிவில்லாப்புத்தருடன்சேர்ந்துகெட்டார்
சீவனையுமீசனையுஞ்சிதைக்கப்பார்த்தார்
நெறியில்லாநேர்வழியுந்தானேயானான்
நெடுமாலைநாமடைந்துநிலைபெற்றோமே. 23

சோதனைவிட்டொருத்தன்சொல மெய்யெனச்சோகதரைச்
சேதனையற்றவரென்று சிதைத்தபின், சீவர்கட்கோர் -
வேதனைசெய்கை வெறுமறமென்றுவிளம்பிவைத்தே
மாதவமென்றுமயிர்பறிப்பார்மயல் மாற்றுவமே. 24

சொன்னார் தாஞ்சொன்னதெலாந் துறவோமென்றும்
சொன்னதுவேசொன்னதலதாகுமென்றும்
தின்னதுந் தின்னுமதுமேகமென்றும்
சிறியனுமாம்பெரியனுமாஞ்சீவனென்றும்
மன்னதுமன்னுமதுமொன்றேயென்றும்
வையமெலாம்விழுகின்றதென்றுமென்றும்
தென்னாடும்வடநாடுஞ்சிரிக்கப்பேசும்
சினநெறியார்சினமெல்லாஞ்சிதைத்திட்டோமே.

ஏகாந்திகமொன்றுமில்லையென்று ஆசையைத்தாழுடுப்பார்
சோகாந்தமாகத்துறப்புண்டபின் தொழில்வைதிகமென்று
ஏகாந்திகள்சொன்ன ஈசன்படியில்விகற்பமெண்ணும்
லோகாந்தவீணர்தம் வேதாந்தவார்த்தைவிலக்குவமே. 26

ஒன்றெனவும்பலவெனவுந்தோற்றுகின்ற
உலகெல்லாமொருபிரமந்தானேயாக்கி
நன்றெனவுந்தீதெனவும்பிரிந்தவெல்லாம்
நன்றன்றுதீதன்றேயெனநவின்றார்
கன்றுமலர்பசுவுமலராகின்றே
கன்றாகிப்பசுவாகின்றவண்ணம்
இன்றுமறைமாட்டுக்கோரிடையனான
ஏகாந்தியிசைந்திடநாமியம்பினோமே. 27

சாயாமறைகளில் சத்தந்தெளிந்திடச்சாற்றுதலால்
தூயாரிவரென்றுதோன்றநின்றே பலசூதுகளால்
மாயாமதமும்மறுசினவாதும் பவுத்தமுஞ்சேர்
[1]வையாகரணர்சொல்லும் மறுமாற்றங்கள்மாற்றுவமே.

1 ‘வையாகரணர்’ என்று மருவிய பாடமே செய்யுளிலக்கணத்திற்குச் சேரும்

கலகத்திற்கலங்கிவருங்காணிக்கெல்லாம்
கண்ணூறுசதிரவழிகட்டுவார்போல்
உலகத்தில்மறைசேர்ந்தவுரைகள்தம்மால்
ஒருபிழையுஞ்சேராமலுபகரித்தார்
பலகத்தும்பவுத்தர்முதலான பண்டைப் -
பகற்கள்ளர்பகட்டழிக்கப்பரவும்பொய்யாம்
சில[1]கற்றுச்சித்தாந்தமறியகில்லாச்
சிறுவரினிமயங்காமற்சேமித்தோமே. 29

கண்டதலாதனகட்டுதலால் கண்டவிட்டநனூல்
பண்டுளதானமறைக்குப் பழமையைமாற்றுதலால்
கொண்டதுமீசனைக் கொள்ளாவகையென்றுகூறுதலால்
கண்டகராய்நின்ற காணுதர்வாதங்கழற்றுவமே. 30

ஆகமத்தையனுமானமென்கையாலும்
அழியாதமறையழிக்கநினைத்தலாலும்
[2]போகமற்றொருபலம்போற்கிடக்கைதானே
புண்ணியர்க்குவீடென்றுபுணர்த்தலாலும்
[3]மாகமொத்தமணிவண்ணன்படியைமாற்றி
மற்றவனுக்கொருபடியைவகுத்தலாலும்
காகமொத்தகாணுதன்கண்ணைவாங்கிக்
காக்கைக்காரென்றலற்றக்காட்டினோமே. 31

கோதமநூல்களைக் குற்றமிலாவகைகூட்டலுமாம்
கோதுகழித்து ஒருகூற்றிற்குணங்களைக்கொள்ளவுமாம்
யாதுமிகந்து ஒருநீதியையாமேவகுக்கவுமாம்
வேதியர்நன்னயவித்தரமென்பது மெய்யுளதே. 32

1 கத்துஞ் 2 போகமற்றபுலம்போலக் 3 மாகமுற்ற

நான்மறைக்குத்துணையாகநல்லோரெண்ணும்
நாலிரண்டிலொன்ருனநயநூல்தன்னில்
கூன்மறைத்தல்கோதுளதுகழித்தல் மற்ருேர் -
கோணுதகோதில்வழிவகுத்தலன்றி
ஊன்மறைத்தவுயிரொளிபோலொத்ததொவ்வாது
உயிரில்லாக்காணுதமுரைத்தவெல்லாம்
வான்மறைக்கமடிகோலும்வண்ணமென்ருேம்
மற்றிதற்கார்மறுமாற்றம்பேசுவாரே? 33

ஈசனுமற்றணங்கும்மிலதென்று எழில்நான்மறையில்
பேசியநல்வினையால் பெரும்பாழுக்குநீரிறைக்கும்
நீசரைநீதிகளால் நிகமாந்தத்தினூல்வழியே
மாசின்மனங்கொடுத்தும் மறுமாற்றங்கள்மாற்றுவமே.

கனைகடல்போலொருநீராஞ்சூத்திரத்தைக்
கவந்தனையுமிராகுவையும்போலக்கண்டு
நினைவுடனேநிலைத்தருமமிகந்துநிற்கும்
நீசர்நிலைநிலைநாடாவண்ணமெண்ணி
வினைபரவுசைமினியார்வேதநூலை
வேதாந்தநூலுடனேவிரகாற்கோத்த
முனையுடையமுழுமதிநம்முனிவர்சொன்ன
மொழிவழியேவழியென்றுமுயன்றிட்டோமே. 35

முக்குணமாய்நின்ற மூலப்பிரகிருதிக்கு, அழியா -
அக்குணமற்றஅருத்துணை மற்றதற்கீசனிலை
இக்கணைப்படியையைந்துமெண்ணில் முன்முத்தியென்னும்
பக்கணவீணர்பழும்பகட்டைப் பழுதாக்குவமே. 36

ஈசனிலனென்பதனுலென்றுஞ்சீவர்
எங்குமுளரிலருணர்வையென்றவத்தால்
பாசமெனும்பிரகிருதிதன்னுல் என்றும்
பலமுமிலைவீடுமிலையென்னும்பண்பால்
காசினிநீர்முதலானகாரியங்கள்
கச்சபத்தின்கால்கைபோலென்னுங்கத்தால்
நாசமலதிலைகாணும்ஞாலத்துள்ளீர் !
நாமிசையாச்சாங்கியத்தைநாடுவார்க்கே. 37

தாவிப்புவனங்கள் தாளிணைசூட்டிய, தந்தையுந்திப் -
பூவிற்பிறக்கினும் பூதங்களெல்லாம்புணர்த்திடினும்
நாவிற்பிரிவின்றி நாமங்கைவாழினும், நான்மறையிற்-
பாவித்ததன்றியுரைப்பது பாறும்பதர்த்திரளே. 38

காரணனுயுலகளிக்குங்கண்ணன்தேசைக்
கண்ணுடிநிழல்போலக்காண்கையாலும்
தாரணையின்முடிவானசமாதிதன்னைத்
தனக்கேற்றும்விளக்கென்றுதனிக்கையாலும்
காரணமாமதுதனக்குப்பயனும் சீவன் -
கைவலியநிலையென்றுகணிக்கையாலும்
கோரணியின்கோலமெனக்குறிக்கலாகும்
கோகனகத்தயன்கூறுஞ்சமயக்கூறே. 39

சாதுசனங்களெலாஞ்சச்சையென்னும் சலம்புணர்த்தார்
கோதமசாபமொன்றால் கொடுங்கோலங்கள்கொண்டுலகில்
பூதபதிக்கடியாரெனநின்று அவன்பொய்யுரையால்
வேதமகற்றிநிற்பார் விகற்பங்கள்விலக்குவமே. 40

மாதவனேபரனென்றுவையங்காண
மழுவேந்திமயல்தீர்க்கவல்லதேவன்
[1]கைதவமொன்றுகந்தவரைக்கடியசாபம்
கதுவியதாலதன்பலத்தைக்கருதிப், பண்டை
வேதநெறியனுகாதுவிலங்குதாவி
வேறாகவிரித்துரைத்தவிகற்பமெல்லாம்
ஓதுவதுருத்திரத்துக்கென்றுரைத்தான்
ஓதாதேயோதுவிக்குமொருவன்றானே. 41

கந்தமலர்மகள்மின்னுங்காரார்மேனிக்
கருணைமுகில்கண்டகண்கள்மயிலாயாலும்
அந்தமில்பேரின்பத்திலடியரோடே
அடிமையெனும்[2]பேரமுதமருந்திவாழத்
தந்தமதியிழந்தரனார்சமயம்புக்குத்
தழல்வழிபோய்த்தடுமாறித்தளர்ந்துவீழ்ந்தீர்!
சந்தநெறிநேரறிவார்சரணஞ்சேர்ந்து
சங்கேதத்தவமுனிவீர்தவிர்மினீரே. 42

யாதுமிலாதவன்றும் யவர்க்குநன்றியெண்ணிய, நம்
மாதவனார்வதனத்தமுதுண்ணும் வலம்புரிபோல்
வாதுகளாலழியாமறைமௌலியின் வான்பொருளே
ஓதிய[3]பஞ்சாத்திரமுகவாரை ஒழுக்குவமே. 43

1 'கோதவ'மென்ற பாடமே செய்யுளிலக்கணத்திற்குச் சேருமென்பர்
2 போகமுத
3 'பஞ்சராத்திரம்' எனுஞ்சொல் தனைநோக்கி இங்ஙனே மருவிநின்றது

※பூவலருந்திருவுந்திப்புனிதன் வையம் -
பொன்னடியாலளந்திருவர்போற்றநின்ற
நாவலருங்கலைகளெலாந்தன்னைநாட
நாடாதநன்னிதியாநணுகுநாதன்
கோவலனாய்நிரையளித்தநிறைபோல் வேதங் -
கோவாகக்கோமானயதன்பால்சேர்த்துக்
காவலிதுநல்லுயிருக்கென்றுகாட்டும்
கார்த்தயுகக்கதிகண்டோங்கரைகண்டோமே. 44

நமக்கார்துணையென நாமென்றருள்தரு -
நாரணனார்
உமக்காறிவையென்றடியிணைகாட்ட
உணார்ந்தடையும்
எமக்கோர்பரமினியில்லாது இருவினை -
மாற்றுதலில்
தமக்கேபரமென்று தாமுயருந்தரஞ் -
சாற்றுவமே. 45

பலத்திலொருதுவக்கற்றபதவிகாட்டிப்
பல்லுயிருந்தடுமாறப்பண்ணுகின்ற
கலித்திரளின்கடுங்கழுதைக்கத்துமாற்றிக்
கண்ணுடையார்கண்டுரைத்தகதியைச்சொன்னோம்
வலத்திலகுமறுவொன்றால்மறுவொன்றில்லா
மாமணியாய்மலர்மாதரொளியாம், அந்நல் -
நலத்திலொருநிகரில்லாநாதன்பாதம்
நல்வழியாமல்வழக்கார்நடத்துவாரே? 46

எல்லார்க்குமெளிதானவேற்றத்தாலும்
இனியுரைக்கைமிகையானவிரக்கத்தாலும்
சொல்லார்க்குமளவாலுமமைதலாலும்
துணிவரிதாய்த்துணைதுறக்குஞ்சுகரத்தாலும்
கல்லார்க்குங்கற்றூர்சொற்கவர்தலாலும்
கண்ணனுரைமுடிசூடிமுடித்தலாலும்
நல்லார்க்குந்தீயார்க்குமிதுவேநன்றும்
நாரணற்கேயடைக்கலமாய்நணுகுவீரே. 47

பண்டைமறைக்குப் பகையெனநின்றபரமதங்கள்
கொண்டவர்கொள்ளும் பயனென்றிலதெனுங்கூர்மதியால்
வண்டுவரைக்கரசான நம்மாயனை, வானுலகிற் -
கண்டுகளிப்பதெனும் காதலொன்றைக்கருதுவமே. 48

❋கலந்திகழும்போகங்கள்கண்டுவெள்கிக்
காரியமுங்காரணமுங்கடந்துநாம்போய்க்
குலந்திகழுங்குருக்களடிசூடி மன்னுங் -
குற்றேவலடியவர்தங்குழாங்கள்கூடி
வலந்திகழுந்திருமகளும் மற்றிடத்தே -
மன்னியமண்மகளாருநீளையாரும்
நலந்திகழவீற்றிருந்தநாதன்பாதம்
நமக்கிதுவேமுடியென்னநண்ணினேமே. 49

மானங்களின்றிவகுத்துரைக்கின்ற மதங்களெலாம்
தானங்களன்றுதருமநெறிக்கென்று சாற்றியபின்
வானங்கவர்ந்து மறைமுடிசூடியமாதவத்தோர்
ஞானங்களொன்றநடக்கின்ற நல்வழிநாடுவமே. 50

தன்னடிக்கீழுலகேழையும்வைத்த
தனித்திருமால்
பொன்னடிக்கேற்கின்ற புண்ணியர்! கேண்மின்,
புகலறிவார் -
முன்னடிபார்த்துமுயலுதலால் அவர் -
சாயையெனப்
பின்னடிபார்த்துநடந்து பெரும்பத -
மேறுவமே. 51

வையமெலாமிருள்நீக்குமணிவிளக்காய்
மன்னியநான்மறைமௌலிமதியேகொண்டு
மெய்யலதுவிளம்பாதவியாசன்காட்டும்
விலக்கில்லாநல்வழியேவிரைந்துசெல்வீர்!
ஐயமறவறுசமயக்குறும்பறுத்தோம்
அணியரங்கரடியவர்க்கேயடிமைசெய்தோம்
மையகடல்வட்டத்துள்மற்றுந்தோற்றும்
வாதியர்தம்வாய்ப்பகட்டைமாற்றினோமே. 52

✻கோதவமொன்றில்லாததகவேகொண்ட
கொண்டலெனவந்துலகிலவர்க்கன்று, ஓர் -
தூதுவனாயொருகோடிமறைகளெல்லாம்
தொடர்ந்தோடத்தனியோடித்துயரந்தீர்த்த
மாதவனார்வடகொங்கில்வானியாற்றின்
வண்ணிகைநன்னடங்கண்டுமகிழ்ந்துவாழும் -
போது, இவைநாம்பொன்னயிந்தைநகரில் முன்னாள்-
புணராதபரமதப்போர்பூரித்தோமே. 53

*திகிரிமழுவுயர்குந்தந்தண்டங்குசம் பொறி -
சிதறுசதமுகவங்கிவாள்வேலமர்ந்ததும்
தெழிபணிலசிலைகண்ணிசீரங்கசெவ்விடி
செழியகதைமுசலந்திசூலந்திகழ்ந்ததும்
அகிலவுலகுகள்கண்டையாயோரலங்கலில்
அடையவடைவிலிலங்கவாசின்றிநின்றதும்
அணியுமருகணையுமலவாமென்னநின்று அடி -
யடையுமடியரையன்பிஞலஞ்சலென்பதும்
மகிழுமமரர்கணங்கள்வானங்கவர்ந்திட
மலியுமசுரர்புணர்த்தமாயந்துரந்ததும்
வளருமணிமணிமின்னவானந்திகொண்டிட
மறைமுறைமுறைவணங்கமாறின்றிவென்றதும்
சிகியிரவிமதியமுமிழ்தேசுந்தவெண்டிசை
திணிமருள்செகவுகந்துசேமங்கள்செய்ததும்
திகழரவணையரங்கர்தேசென்னமன்னிய
திரிசுதரிசனர்செய்யவீரெண்புயங்களே. 54

## பரமதபங்கம் முற்றிற்று

சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான்திருவடிகளே சரணம்

---

**அடிவரவு—** எண்டளை, விடுநெறி, போமுரை, சித்தும், முத்தின், நாக்கியல், தீவகை, வேலை, சிறைநிலை, வெறியார்; மிண்டு—

மிண்டு, கண்டதுமெய், கண்டதனல், காணுது, மானமிலை, முற்றும், உளக்கதி, பொருளொன்றிலது, நிலையில்லா, காண்கின்ற; கும்பிடு—

கும்பிடு, வேதங்கள், பிரிவில்லா, சோதனை, சொன்னர், ஏகாந்திகம், ஒன்றெனை, சாயா, கலகத்தில், கண்டதலாதன; ஆகமத்தை —

ஆகமத்தை, கோதம, நான்மறைக்கு, ஈசனும், கனைகடல், முக்குணமாய், ஈசனிலன், தாவி, காரணனுய், சாது; மாதவனே—

மாதவனே, கந்த, யாதும், பூவலரும், நமக்கார், பலத்தில், எல்லார்க்கும், பண்டைமறை, கலந்திகழும், மானங்கள்; தன்னடி—

தன்னடி, வையமெலாம், கோதவம், திகிரி; வாழி—

# அத்திகிரிமான்மியம்

சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான்திருவடிகளே சரணம்

தனியன்

𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌦𑌯𑌾𑌪𑌾𑌤𑍍𑌰𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌭𑍂𑌷𑌣𑌂 ।
𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌵𑍇𑌙𑍍𑌕𑌟𑌨𑌾𑌥𑌾𑌰𑍍𑌯𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌦𑍇𑌶𑌿𑌕𑌂 ॥

சீரொன்று தூப்புல் திருவேங் கடமுடையான்
பாரொன்றச் சொன்ன பழமொழியுள் — ஓரொன்று
தானே அமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு
வானேறப் போமளவும் வாழ்வு.

---

❋வாழியருளாளர் வாழியணியத்திகிரி
வாழியெதிராசன்வாசகத்தோர் — வாழி
சரணாகதியெனுஞ்சார்வுடன் மற்றொன்றை
அரணாகக்கொள்ளாதாரன்பு. 1

எண்டிசையுங்கடலேழுமலைகளேழும்
ஈரேழுவையகமும்படைத்திலங்கும்
புண்டரிகத்தயன்புணர்த்தபெரியவேள்விப்
புனிதநறும்போக்கியத்தையுவந்து
தொண்டையெனுமண்டலத்தினடுவிற்பாரில்
தூநிலமெய்விரதத்துத்தோன்றிநின்ற
கொண்டலருட்குணமேநாங்கூறுகின்றோம்
கூர்மதியீர்!குறியாகக்கொண்மினீரே. 2

[1] வம்மின் புலவீர்! அருளாளப்பெருமாளென்றுமருளாழி -
யம்மானென்றும், திருமகளைப்பெற்றுமெனெஞ்சங் கோயில்கொண்ட -
பேரருளாளரென்றும், வியப்பாவிருதூதும்படிகரைபுரண்ட
கருணைக்கடலை, எவ்வண்ணம்பேசுவீர் ? ஈதென்னபாங்கே ?

ஒன்றேபுகலென்று உணர்ந்தவர்காட்டத், திருவருளால் -
அன்றேயடைக்கலங்கொண்ட நம்மத்திகிரித்திருமால்
இன்றேயிசையினிணையடிசேர்ப்பர் இனிப்பிறவோம்
நன்றேவருவதெலாம் நமக்குப்பரமொன்றிலதே. 4

வம்பவிழ்போதமர்மாதருகந்த அம்மாநிதியைத்
தன்பலமேகொண்டுகாணக்கருதிய தாமரையோன்
முன்பலகுற்றத்துவல்வினைமொய்க்க முகிழ்மதியாய்
அம்புலிவேண்டியபாலனைப்போல அழுதனனே. 5

அடங்காக்கரணங்கள் ஐந்துடனாறுமடக்கிமுன்னம்
நெடுங்காலமிந்நிலமே நிலையாப்பூண்டுநீடுறைவான்
சடங்காற்பெரியதவங்கள்செய்தேன் என்னதன்மையிதென்று
இடங்காத்திருந்ததிசைமுகன் தன்னையிகழ்ந்தனனே. 6

விண்ணுலகில்வீற்றிருந்தமேன்மையாலும்
வேதங்களீரிரண்டும்விரித்தலாலும்
கண்ணனைநான்கருத்துறவேகாண்பனென்னக்
காணுமல்விலக்கியதன்வினையைக்காணு
எண்ணியநற்புவனங்களேழுமாறும்
இருமூன்றுதீவமுமெட்டிடமும்விட்டுப்
பண்ணியநல்விரதமெலாம்பலிக்குமென்று
பாரதத்திற்பங்கயத்தோன்படிந்திட்டானே. 7

1 இப்பாவைச் செந்தொடையான வேற்றொலிவெண்டுறையென்பர்

எத்திசைநிலனுமெய்தி அருந்தவஞ்செய்தவந்நாள்
'சத்தியவிரதஞ்செல்வா'யென்ற ஒருரையின்சார்வால்
அத்திசைசென்றழைத்து அங்கமராரில்லெடுப்பான்றன்னை
'உத்தரவேதிசெய்'யென்று உரையணங்கிறையுரைத்தான்.

உத்தமவமர்த்தலமமைத்ததொரெழிற்றனு -
வுயர்த்தகணையால்
அத்திரவரக்கன்முடிபத்துமொருகொத்தென -
வுதிர்த்ததிறலோன்
மத்துறுமிகுத்ததயிர்மொய்த்தவெண்ணெய்வைத்ததுணு -
மத்தனிடமாம்
அத்திகிரிபத்தர்வினைதொத்தறவறுக்குமணி -
யத்திகிரியே. 9

திண்மணிகள்பொன்னுடனேசேர்தலாலும்
சிதையாதநூல்வழியிற்சேர்த்தியாலும்
வண்மையெழுமீரிரண்டுவருணத்தாலும்
வானவர்க்கும்வியப்பானவகுப்பினாலும்
[1]ஒண்மையுடைவாசி[2]விளியோசையாலும்
ஒருகாலுமழியாதவழகினாலும்
மண்மகளார்க்கலங்காரமென்னமன்னும்
மதிட்கச்சிநகர்கண்டுமகிழ்ந்திட்டானே. 10

---

1 உண்மை 2 ஒளி

'காமங்கள்பலகொண்டவேதங்கொண்டு
கைதவமேசெய்வார்க்குக்காணகில்லாப்
பூமங்கைகேள்வனைநான்கண்டுபோற்றப்
புண்ணியத்தில்நிகரில்லாவிரதம்பூண்டேன்
சாமங்கள்கழிவதன்முன்சடக்கெனப்போய்த்
தன்னுற்றில்தனியிருந்துதவஞ்செய்கின்ற
நாமங்கைவந்திடநீயழைப்பா'யென்று
நன்மகனைநான்முகன்றான்நவின்றிட்டானே. 11

அன்னவடிவாளசையுமன்னநடையாளுயரு -
மன்னவரசேறிவருவாள்
அத்தனயனத்தனயனுத்திதனையத்திதென -
வுத்திபுரியாள்

நன்னடைவிடாநடமிதென்னநடவாநடுவுள் -
நண்ணுகுடகேறியிழிவாள்
நற்பதிகளற்பதிகள்கற்புரளவற்புதம -
ருற்கதியினல்

கன்னடைவிடாவிடமிலுன்னதிசிருவிகட -
மன்னுகிரிகூடமிடியக்
கட்டவிடையிற்றுவிழமுற்றும்விழியுற்றடைய -
விட்டருகுற

அன்னநயசீரயனிதென்னெனவிழாவமரர் -
மன்னுபதியேறிமகிழ
அச்சுதனணைத்தனுவிலத்திசைவரத்தகைய -
வற்றணுகினள். 12

அன்றுநயந்த அயமேதமாவேள்வி -
பொன்ற, உரையணங்குபூம்புனலாய்க் — கன்றிவர,
ஆதியயனுக்கு அருள்செய்தணையானன்
தாதையரவணையான்தான். 13

தரணியில்மன்னி அயனார்தனித்தவங்காத்தபிரான்
கருணையெனுங்கடலாடித் திருவணைகண்டதற்பின்
திரணரகெண்ணிய சித்திரகுத்தன்தெரித்துவைத்த
சுருணையிலேறிய சூழ்வினைமுற்றுந்துறந்தனமே. 14

சுகலேசமெண்ணிய சூழ்வினைதீர்க்கத்துணிந்து, அயனார் -
அகலாதவன்புடன்கொண்ட அயமேதவேதியின்மேல்
புகலோங்குபொன்மலையன்ன ஓர்புண்ணியகோடியுடன்
பகலோன்பகல்விளக்காகப் பரஞ்சுடர்தோன்றியதே. 15

பெருமையுடையத்திகிரிப்பெருமாள்வந்தார்
பேராத அருள்பொழியும்பெருமாள்வந்தார்
அருமறையினுச்சிதனில்நின்றார்வந்தார்
அங்கமுடனவையாகுமரியோர்வந்தார்
திருவுரையாய்த்தாம்பொருளாய்நிற்பார்வந்தார்
திருவருளாற்செழுங்கலைகள்தந்தார்வந்தார்
மருவலர்க்குமயக்குரைக்குமாயோர்வந்தார்
வானேறவழிதந்தார்வந்தார்தாமே. 16

அத்திகிரியருளாளப்பெருமாள்வந்தார்
ஆனைபரிதேரின்மேலழகர்வந்தார்
கச்சிதனிற்கண்கொடுக்கும்பெருமாள்வந்தார்
கருதவரந்தருதெய்வப்பெருமாள்வந்தார்
முத்திமழைபொழியுமுகில்வண்ணர்வந்தார்
மூலமெனவோலமிடவல்லார்வந்தார்
உத்தரவேதிக்குள்ளேயுதித்தார்வந்தார்
உம்பர்தொழுங்கழலுடையார்வந்தார்தாமே. 17

* இருபரிதியேய்ந்தமகுடமும்
எழின்மதிதிகழ்ந்தவதனமும்
இருவகையிலங்குகுழைகளில்
எதிர்பொரவுகந்தமகரமும்

ஒருதகவுயர்ந்ததிருமகள்
ஒளிமறுவின்மன்னுமகலமும்
உருவருவமிழ்ந்தவுதரமும்
உலகடையநின்றகழல்களும்

மருவினிடையோங்குபுனலென
மலைகுனியநின்றமலையென்ன
மருளறவிளங்குமொளியென
மலரயனுகந்தபயனென

அருவிலுறைகின்றவுயிரென
அடியவருகந்தவமுதென
அருமறைகளொன்றியடிதொழ
அருள்வரதர்நின்றபெருமையே ! 18

சித்தசித்தெனவிரித்துரைத்தன -
அனைத்தமைத்துறையுமிறைவனோர்
சிறியபெரியவுருவடையவுடலமென -
நடலமிலதிலகுநிலையினோர்

சித்திரத்தொழிலையொத்தபத்தரொடு -
முத்தர்பித்தியெனுமுணர்வினோர்
சிதைவில்மறைநெறியிலெறியவுருமுறைகள் -
முறியசிறையரியநிறைவினோர்

கத்துவிக்கவலகத்துவித்தைவழி -
கற்றவர்க்கசைவில்மாயனோர்
கபிலர்கணசரணர்சுகதர்சமணரரர் -
வழிகளழியுமருள்மொழியினோர்

கத்திலக்கிலுமருக்குலத்திலும் -
அசித்திலொக்குமொருமுதல்வனோர்
கரணமிடுகடியபதினொரிருடிகமும் -
அடையமுடியுமடியிருடியார்

ஒத்தனைத்துலகுமொற்றியொற்றிவரும் -
இப்பவத்திசையினிசைவினோர்
உருவமருவமெனுமுலகின்முடகிலதில் -
உவமையிலதிலகுதலைவனோர்

உத்தமப்படிவகுத்தவித்தைகளில் -
உத்தரிக்கவுணர்குணவனோர்
உரியகிரிசைகளிலரியதொருவிரகு -
தெரியவிரையுமவர்பரிவினோர்

சத்தசத்தெனுமனைத்தணைத்தவினை -
தொத்தறுக்கவலதுணிவினர்
சரியுமளவிலுரியவரையறிவரிய -
தமனிநெறிசெருகுவிரகினர்

தத்துவத்திரளுதைத்துதைத்தடைவு -
தத்துவிக்குமவர்தலைவனர்
தருகவுனருமவர்சரணமணுகவிட -
லரியவருள்வரதரடியமே. 19

திருமகள்மண்மகள்நீளைமுதலாவெல்லாத் -
தேவியரும் தன்னுடனேதிகழ்ந்துநிற்கத்
தருமமிருமூன்றுமுதலனைத்துந்தோன்றத்
தன்னனையசூரியர்தன்னடிக்கீழ்வாழ
அருமறைசேரளவில்லாவவனியின்கண்
அரவணைமேல்வீற்றிருப்பாலனைத்துங்காக்கு
கருமணியைக்கரிகிரிமேற்கண்டேன் என்றன் -
கடுவினைகளனைத்தும்நான்கண்டிலேனே. 20

பெடையிரண்டையொரனமடைந்து -
பிரிந்திடாவகைபேசலாம்
பெருகுமருவிகளருகுமருவிய -
பெரியமணிவரைபயிலலாம்

பிடியிரண்டொடுகளபமொன்று -
பிணைந்தபேரழகோதலாம்
பிரிவிலொளியொடுநிழலுமருகுறும் -
இரவியிலகுதல்பரவலாம்

கொடியிரண்டொடுவிடவியொன்று -
குளிர்ந்தவாறுகுலாவலாம்
குறைவில்சுருதியுநினைவுமிலகிய -
தருமவருநிலையென்னலாம்
அடியிரண்டையுமடையுமன்பர் -
அறிந்தபேரருளாளனார்
அணுகுமலர்மகளவனிமகளொடு -
கரடிகிரிநிலைகவர்தலே. 21

வேரொப்பார்விண்முதலாங்காவுக்கெல்லாம்
விழியொப்பார்வேதமெனுங்கண்தனக்குக்
காரொப்பார்கருணைமழைபொழிந்திடுங்கால்
கடலொப்பார்கண்டிடினுங்காணக்கூடத்தால்
நீரொப்பார்நிலமளிக்குந்தன்மைதன்னால்
நிலமொப்பார்நெடும்பிழைகள்பொறுக்குநேரால்
ஆரொப்பார்? இவர்குணங்களனைத்துங்கண்டால்
அருளாளர்தாமெனினுந்தமக்கொவ்வாரே. 22

எந்நிலமுங்குரத்தால் குறிசெய்த -
எழிற்பரிகொண்டு
அன்னமுயர்த்தசெய்யோன் அன்றுவேள்விசெய் -
வேதியின்மேல்
முன்னிலையாகியமூர்த்தியன் 'நான்முக ! -
மற்றுமுனக்கு
என்னவரந்தருவோ'மென்று நாத -
னியம்பினனே. 23

1 சென்றுமலைப்பதிந்து நந்நதன் சேவைப்பெற்றுகந்து
கன்றுமேய்த்தோன் நன்று மங்களாசாசனங்கொடுத்துக்
கல்லணைகட்டுவித்தோன் அன்னைத்திடைகதிபடைத்துப்
பின்னுஞ்செலுத்தி அவன்பாதம்பணியின்கணென்றனனே.

ஆழிநிலைவிளைக்கவந்தான் ஆயமேதமுடிந்ததற்பின்
வேழமலைநாயகனார் விடைகொடுக்கவிண்ணேறி
நாழிகையில்வானவரை மாற்றியிடுமான்முகன்றான்
ஊழியெலாமழியாத உயோகமடைந்திருந்தானே. 25

ஆதியுகத்தயன்கண்டிடநின்ற அருள்வரதர்
காதலுயர்த்தகளிற்றைறத் திரேதையிற்காத்தளித்து
வாதுயர்தேவகுருவுக்கிரங்கித் துவாபரத்தில்
சோதியனந்தன் கலியில்தொழுதெழநின்றனரே. 26

✻ புண்டரீகமுயர்த்தபுராணனார்
பொய்யில்மாமகஉத்தரவேதியில்
கொண்டலாரருள்மாரிபொழிந்திடக்
கொண்டதோருயர்கூர்மதியன்பினால்
பண்டைநான்மறைமௌலிபடிந்தயான்
பாரில்மெய்விரதக்கவிபாடினேன்
தொண்டைமண்டலவேதியர்வாழ்கவே
தூயதென்மறைவல்லவர்வாழ்கவே. 27

1 இப்பாசுரம் நம் தேசிகனதன்றென்பர் சிலர்

* உய்விரதமொன்றின்றியடைந்தாருய்ய
ஒருவிரதந்தான்கொண்டவுயர்ந்தமாலைச்
செய்விரதமொன்றாலுந்தெளியகில்லாச்
சிந்தையினுந்திசைபடைத்ததிசைமுகன்றான்
பொய்விரதநிலமெல்லாம்போயேமீண்டு
புகலிதுவேபுண்ணியத்துக்கென்றுசேர்ந்த
மெய்விரதநன்னிலத்துமேன்மையேத்தி
வேதாந்தவாசிரியன்விளங்கினனே. 28

* சீராருந்தூப்புல் திருவேங்கடமுடையான்
தாராரருளாளர்தாள்நயந்து—சீராக
மெய்விரதநன்னிலத்து மேன்மையிதுமொழிந்தான்
கையிற்கனிபோலக்கண்டு. 29

## அத்திகிரிமான்மியம் முற்றிற்று

சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான்திருவடிகளே சரணம்

---

அடிவரவு— வாழி, எண்டிசையும், வம்மின், ஒன்றே, வம்பவிழ், அடங்கா, விண்ணுலகில், அத்திசை. உத்தம, திண்மணி, காமங்கள்—

காமங்கள், அன்ன, அன்று, தரணியில், சுகலேசம், பெருமை, அத்திகிரி, இருபரிதி, சித்தசித்து, திருமகள்மண், பெடை—

பெடை, வேறொப்பார், எந்நிலம், சென்றுமலர், ஆழிநிலை, ஆதியுகத்து, புண்டரீகம், உய்விரதம், சீராரும், பத்தி

# அடைக்கலப்பத்து

சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான்திருவடிகளே சரணம்

தனியன்

𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌦𑌯𑌾𑌪𑌾𑌤𑍍𑌰𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌭𑍂𑌷𑌣𑌮𑍍 |
𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌵𑍇𑌙𑍍𑌕𑌟𑌨𑌾𑌥𑌾𑌰𑍍𑌯𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌦𑍇𑌶𑌿𑌕𑌮𑍍 ||

சீரொன்று தூப்புல் திருவேங் கடமுடையான்
பாரொன்றச் சொன்ன பழமொழியுள்—ஓரொன்று
தானே யமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு
வானேறப் போமளவும் வாழ்வு.

---

❋ பத்திமுதலாமவற்றில் பதியெனக்குக்கூடாமல்
எத்திசையுமுழன்றோடி இளைத்துவிழுங்காகம்போல்
முத்திதருநகரேழில் முக்கியமாங்கச்சிதனில்
அத்திகிரியருளாளர்க்கு அடைக்கலநான்புகுந்தேனே. 1

சடைமுடியன்சதுமுகனென்று இவர்முதலாந்தரமெல்லாம்
அடையவினைப்பயனாகி அழிந்துவிடும்படிகண்டு
கடிமலராள்பிரியாத கச்சிநகரத்திகிரி
இடமுடையவருளாளர் இணையடிகளடைந்தேனே. 2

தந்திரங்கள்வேறின்றித் தமதுவழியழியாது
மந்திரங்கள்தம்மாலும் மற்றுமுளவுரையாலும்
அந்தரங்கண்டடிபணிவார் அனைவர்க்குமருள்புரியும்
சிந்துரவெற்பிறையவனார் சீலமலதறியேனே. 3

காகமிராக்கதன் மன்னர்காதலிகத்திரபந்து
நாகமரனயன்முதலா நாகநகரார்தமக்கும்
போகமுயர்வீடுபெறப் பொன்னருள்செய்தமைகண்டு
நாகமலைநாயகனார் நல்லடிப்போதடைந்தேனே. 4

உகக்குமவையுகந்துஉகவாவனைத்துமொழிந்து,உறவுகுணம்
மிகத்துணிவுபெறவுணர்ந்து வியன்காவலெனவரித்துச்
சகத்திலொருபுகலில்லாத் [1]தவமிலியேன், மதிட்கச்சி-
நகர்க்கருணைநாதனை நல்லடைக்கலமாயடைந்தேனே. 5

அளவுடையாரடைந்தார்க்கும் அதனுரையேகொண்டவர்க்கும்
வளவுரைதந்தவனருளே மன்னியமாதவத்தோர்க்கும்
களவொழிவாரெமரென்ன இசைந்தவர்க்குங்காவலராம்
துளவமுடியருள்வரதர் துவக்கிலெனைவைத்தேனே. 6

‘உமதடிகளடைகின்றே’னென்று ஒருகாலுரைத்தவரை
அமையுமினியென்பவர்போல் அஞ்சலெனக்கரம்வைத்துத்
தமதனைத்துமவர்தமக்கு வழங்கியுந்தாம்மிகவிளங்கும்
அமைவுடையவருளாளர் அடியிணையையடைந்தேனே. 7

திண்மைகுறையாமைக்கும் நிறைகைக்கும், தீவினையால்-
உண்மைமறவாமைக்கும் உளமதியிலுகக்கைக்கும்
தண்மை[2]கழியாமைக்கும் தரிக்கைக்குந்தணிகைக்கும்
வண்மையுடையருளாளர் வாசகங்கள்மறவேனே. 8

1 தவமறியேன் 2 குறையாமை

சுருதிநினைவிவையறியும் துணிவுடையார் தூமொழிகள்
பரிதிமதியாசிரியர் பாசுரஞ்சேர்த்தருக்கணங்கள்
கருதியொருதெளிவாளால் கலக்கமறுத்தத்திகிரிப்
பரிதிமதிநயனமுடைப் பரமனடிபணிந்தேனே. 9

* திருமகளுந்திருவடிவும் திருவருளுந்தெள்ளறிவும்
அருமையிலாமையுமுறவும் அளப்பரியவடியரசும்
கருமமழிப்பளிப்பமைப்பும் கலக்கமிலாவகைநின்ற
அருள்வரதர்நிலையிலக்கில் அம்பெனநானமிழ்ந்தேனே.

* ஆறுபயன்வேறில்லா அடியவர்களனைவர்க்கும்
ஆறுமதன்பயனுமிவை ஒருகாலும்பலகாலும்
ஆறுபயனெனவேகண்டு அருளாளரடியிணைமேல்
கூறியநற்குணவுரைகள் இவைபத்துங்கோதிலவே. 11

அடைக்கலப்பத்து முற்றிற்று

சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான்திருவடிகளே சரணம்

---

அடிவரவு— பத்தி, சடைமுடி, தந்திரங்கள்வேறு, காகம், உகக்கும், அளவு, உமதடி, திண்மை, சுருதி, திருமகளும், ஆறுபயன், அமலன்

ஸ்ரீ:

# அருத்தபஞ்சகம்

சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான்திருவடிகளே சரணம்

தனியன்

ராமாநுஜதயாபாத்ரம் ஜ்ஞாநவைராக்யபூஷணம் |
ஸ்ரீமத்வேங்கடநாதார்யம் வந்தே வேதாந்ததேசிகம் ||

சீரொன்று தூப்புல் திருவேங் கடமுடையான்
பாரொன்றச் சொன்ன பழமொழியுள்— ஓரொன்று
தானே அமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு
வானேறப் போமளவும் வாழ்வு.

---

❋ அமலனவியாதசுடர் அளவில்லாவாரமுதம்
அமலவுருக்குணங்களணி ஆயுதங்களடியவர்கள்
அமலவழியாதநகர் அழிந்தெழுங்காவுடனெல்லாம்
கமலையுடனரசாளும் கரிகிரிமேற்காவலனே. 1

உள்ளபொருளனைத்துக்கும் உருவநிலைகருமங்கள்
தெள்ளிசையின்வசமாக்கித் திகழ்ந்துயிராயுறைகின்றான்
நள்ளிருள்தீர்த்தடியவர்க்கு நலங்கொடுக்குந்திருவுடனே
வள்ளலருளாளரெனும் வாரணவெற்பிறையவனே. 2

பூதவுடல்புலன்கள்மனம் புல்லாவிபுந்தியெனும்
யாதுமலனாயுலகில் யானெனுமின்னுண்ணறிவாய்ச்
சேதனனாயடிமையுமாம் உயிர்க்கெல்லாந்திண்ணுயிராய்த்
தீதலன்றித்திகழும் சீரத்திகிரித்திருமாலே. 3

தானடைந்தகுணங்கருவி தன்கிரிசைவழியொழுக்கி
ஊனொடுத்துண்டுமிழ்ந்துழலும் உயிர்க்கெல்லாமுயிராகிக்
கானடத்திக்கமலையுடன் கண்டுகந்துவிளையாடும்
தேனொடுத்தசோலைகள்சூழ் திருவத்தியூரானே. 4

உய்யுமுறவிசையாதே ஒத்தவர்க்கேயடிமையுமாய்ப்
பொய்யுருவைத்தனக்கேற்றிப் புலன்கொண்டபயனேகொண்டு
ஐயுறவுமாறிருளும் அல்வழியுமடைந்தவர்க்கு
மெய்யருள்செய்திடும் திருமால்வேழமலை[1]மேயவனே. 5

விதைமுளையின்நியாயத்தால் அடியில்லாவினையடைவே
சதையுடலநால்வகைக்கும் சரணளிப்பானெனத்திகழ்ந்து
பதவியறியாது பழம்பாழிலுழல்கின்றார்க்கும்
சிதைவிலருள்தரும் திருமால்திருவத்திநகரானே. 6

எமநியமவாசனங்கள் இயலாவிபுலனடக்கம்
தமதறியுந்தாரணைகள் தாரையருநினைவொழுக்கம்
சமமுடையசமாதிநலம் சாதிப்பார்க்கிலக்காகும்
அமரர்தொழுமத்திகிரி அம்புயத்தாளாரமுதே. 7

புகலுலகிலில்லாது பொன்னருள்கண்டுற்றவர்க்கும்
அகலகிலாவன்பர்க்கும் அன்றேதன்னருள்கொடுத்துப்
பகலதனால் பழங்கங்குல்விடிவிக்கும், பங்கயத்தாள் -
‘அகலகிலே’னென்றுறையும் அத்திகிரியருள்முகிலே. 8

1 மெய்யவனே

இருவிலங்குவிடுத்து இருந்தசிறைவிடுத்துஓர்நாடியினல்
கருநிலங்கள்கடக்கும்வழி காவலராற்கடத்துவித்துப்
பெருநிலங்கண்டுயிருணர்ந்து பிரியாமலருள்செய்யும்
உருநலங்கொண்டுறுந்திருவோடு உயரத்திகிரியானே. 9

❋ தன்திருமாதுடனேதான் தனியரசாயுறைகின்ற
அந்தமில்பேரின்பத்தில் அடியவரோடெமைச்சேர்த்து
முந்தியிழந்தனவெல்லாம் முழுக்கத்தந்தாட்கொள்ளும்
அந்தமிலாவருளாழி அத்திகிரித்திருமாலே. 10

❋ அயன்பணியுமத்திகிரி அருளாளரடியிணைமேல்
நயங்கள்செறிகச்சிநகர் நான்மறையோர்நல்லருளால்
பயன்களிவையனைத்துமெனப் பண்டுரைத்தார்படியுரைத்த
வியன்கலைகளீரைந்தும் வேதியர்கட்கினியனவே. 11

அருத்தபஞ்சகம் முற்றிற்று

சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான்திருவடிகளே சரணம்

---

அடிவரவு— அமலன், உள்ளபொருள், பூதவுடல், தானடைத்த, உய்யுமுறவு, விதைமுளை, எமநியம, புகலுலகில், இருவிலங்குவிடுத்து, தன்திரு, அயன்பணியும், வரியிருள்

ஸ்ரீ:

# ஸ்ரீ-வைணவதினசரி

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

தனியன்

ராமாநுஜ தயாபாத்ரம் ஜ்ஞாநவைராக்ய பூஷணம் |
ஸ்ரீமத் வேங்கடநாதார்யம் வந்தே வேதாந்ததேஶிகம் ||

சீரொன்று தூப்புல் திருவேங் கடமுடையான்
பாரொன்றச் சொன்ன பழமொழியுள் — ஓரொன்று
தானே அமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு
வானேறப் போமளவும் வாழ்வு.

---

* வரியிருளழிவழிமனம்வருமுணர்வொடு
கரிகிரிமருவியகரியவனடியிணை
பரிவொடுபரவுநலடியவர்பழவுரை
அரியரியரியரியரியரியரியே. 1

வினைவகையொழுகியவெறிநிலையடையவும்
நினைவுடைநிகழெதிர்நிலைநலமணுகிட
மனமுறைகிரிசைகள்மகிழ்மறைநெறிகொடு
தனிமுதலடியிணையடைபவர்தமரே. 2

மலர்மகள்மருவியமறுவுடையிறையவன்
மலரடிகருதியமனமுடையடியவர்
மலர்புனலமுதுடன்வகையனவடையவும்
மலர்மதியெமதலவென[1]வறிபவரே. 3

நறையுடைமலர்மகள்நலமுறமருவிய
இறையவனினிதுறவினியவையெனுமவர்
அறநெறியிலனவனணுகிலுமணுகிலர்
துறையலதெனுமொருதுறைபடுகிலரே. 4

ஒளிமதியெனவொருதிருவுடனுயர்பவன்
நளிமதிமுகநகைநலநிலவுகவுகள்
தெளிபுனலமுதனசெழுமதியடியவர்
குளிமுதல்கிரிசைகள்குறைகிலர்வலவே. 5

வருவதொருறவெனவளரிளவரசென
மருவுநன்மகனெனவனமதகரியென
அருவிலைமணியெனவடியவரடைபவர்
அருகணையிறைவனையருகணையுடனே. 6

விரைகமழ்மலர்மகள்மிகவுறுமிறையவன்
குரைகழல்குறுகியகுளிர்மதிமதியொடு
வரைநிலையடியவர்மறைகளின்மறையெனும்
உரைநிரைபரவுவருளமமுதுணவே. 7

1 வருபவரே

துதிகளுமறிவருசுருதியினிறுதியின்
இதயமிதெனமுனியிறையவருரைகளும்
மதுரமனுதவியமறைகளுமடியவர்
விதிவகைபரவுவர்மிகவுளமெழவே. 8

✻ அறிவிலர்தலைமிசையயனடியெழுதிய
பொறிவகையெழுவதொர்பொறிநலமுகவலர்
உறுவதுமுடையதுமிதுவெனவருவது
நறுமலர்மகள்பதிநலமுறுநினைவே. 9

✻ பெருகியநலநிலைபெருமையின்மிகுமயல்
உருகியநிலைமனமுயர்முகிழெழுமுடல்
சொருகியவிழிதிகழ்சுடர்மதிபுகுமிறை
கருகியவுருதிகழ்கரிகிரியரியே. 10

ஸ்ரீ-வைணவதினசரி முற்றிற்று

சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான்திருவடிகளே சரணம்

---

அடிவரவு— வரியிருள், வினைவகை, மலர்மகள், நறையுடை, ஒளிமதி, வருவது, விரைகமழ், துதிகளும், அறிவிலர், பெருகிய, ஈருலகை

ஸ்ரீ:

# திருச்சின்னமாலை

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

தனியன்

𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌦𑌯𑌾𑌪𑌾𑌤𑍍𑌰𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌭𑍂𑌷𑌣𑌮𑍍 |
𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌵𑍇𑌙𑍍𑌕𑌟𑌨𑌾𑌥𑌾𑌰𑍍𑌯𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌦𑍇𑌶𑌿𑌕𑌮𑍍 ||

சீரொன்று தூப்புல் திருவேங் கடமுடையான்
பாரொன்றச் சொன்ன பழமொழியுள்—ஓரொன்று
தானே யமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு
வானேறப் போமளவும் வாழ்வு.

மன்னுதிரு மந்திரத்தின் வாழ்துவயத் தின்பொருளும்
துன்னுபுகழ்க் கீதைதனில் சொன்னவெண்ணுன் கின்பொருளும்
அன்னவயற் கச்சியரு ளாளர்திருச் சின்னமாலை
இன்னபடி யென்றுரைத்தா னெழில்வேதாந் தாரியனே.

ஏகாந்த மூன்று மெழிலா லுரைசெய்து
மாகாந்தஞ் செய்தருளும் வள்ளல்தான்—சாகாந்த
தேசிகனுந் தூப்புல் திருவேங்க டேசகுரு
வாசகமே யெங்களுக்கு வாழ்வு.

பரிச்சின்ன மான விருநா லெழுத்தின்பல் வண்மையெலாம்
விரிச்சு நலம்பெற வோதவல் லோர்க்கிந்த மேதினிக்கே
மரிச்சின்ன மீளப் பிறவாமல் வாழ்விக்கு மால்வரதர்
திருச்சின்ன வோசை யினிமையுண் டோமற்றைத் தேவருக்கே.

❋ ஈருலகைப்படைக்கவெண்ணியிருந்தார்வந்தார்
எழில்மலரோன்றன்னையன்றேயீன்றார்வந்தார்
மாருதமண்ணீராகுமாயோர்வந்தார்
வானொடெரிதாமாகுமறையோர்வந்தார்
சூரியர்தம்முடன்துலங்குதூயோர்வந்தார்
சுரர்களுக்கன்றமுதருள்சுந்தரனார்வந்தார்
வாரிதிசூழ்வையகம்வாழ்வித்தார்வந்தார்
வண்மையுடன்வரந்தருவார்வந்தார்தாமே. 1

அருமறையையூழிதனிற்காத்தார்வந்தார்
அதுதன்னையன்றயனுக்களித்தார்வந்தார்
தருமவழியழியாமற்காப்பார்வந்தார்
தாமரையாளுடனிலங்குந்தாதைவந்தார்
திருவுரையாய்த்தாம்பொருளாய்நிற்பார்வந்தார்
திருவருளாற்செழுங்கலைகள்தந்தார்வந்தார்
மருவலர்க்குமயக்குரைக்குமாயோர்வந்தார்
வானேறவழிதந்தார்வந்தார்தாமே. 2

அனைத்துலகுங்காக்குமருளாளர்வந்தார்
அனைத்துக்குமதிபதியாய்நிற்பார்வந்தார்
தினைத்தனையுந்திருமகளைவிடாதார்வந்தார்
தேசொத்தார்மிக்காருமில்லார்வந்தார்
நினைக்கநமக்கின்னறிவுதந்தார்வந்தார்
நிலைநின்றவுயிர்தோன்றநினைந்தார்வந்தார்
எனக்கிவர்நானிவர்க்கென்னவினியார்வந்தார்
எழுத்தொன்றில்திகழநின்றார்வந்தார்தாமே. 3

நாம்வணங்கத்[1] தாமணங்காநறபாரவநதார
நம்மையடைக்கலங்கொள்ளுநாதர்வந்தார்
நாமெமக்காம்வழக்கெல்லாமறுத்தார்வந்தார்
நமக்கிதுவென்றுரையாமல்வைத்தார்வந்தார்
சேமமெண்ணியெம்மையன்பர்க்கடைத்தார்வந்தார்
செழுந்தகவால்திண்சரணுமீசர்வந்தார்
தாமனைத்துந்தீவினையைத்தவிர்ப்பார்வந்தார்
தமக்கேயாயெமைக்கொள்வார்வந்தார்தாமே. 4

உலகெல்லாமுள்ளேவைத்துமிழ்ந்தார்வந்தார்
உலகுடம்பாய்த்தாமுயிராய்நின்றார்வந்தார்
அலைகடலாயானந்தமடைந்தார்வந்தார்
அளவில்லாவருளாழிப்பெருமாள்வந்தார்
திலகமெனுந்திருமேனிச்செல்வர்வந்தார்
செழுங்குணங்களிருமூன்றுமுடையார்வந்தார்
இலகுசுடர்முழுநலமாமினியார்வந்தார்
எல்லார்க்குங்கதியானார்வந்தார்தாமே. 5

அருளாலேவிலங்கிரண்டுமழிப்பார்வந்தார்
அஞ்சிறையைக்கழித்தருளுமன்பர்வந்தார்
மருள்வாராவகைநம்மைக்காப்பார்வந்தார்
வானேறவழிநடத்திவைப்பார்வந்தார்
தெருளாருந்தெளிவிசும்புதருவார்வந்தார்
திண்கழற்கீழ்வாழநமக்கருள்வார்வந்தார்
பொருளான அடிமைநமைக்கொள்வார்வந்தார்
பிரியாமற்காத்தளிப்பார்வந்தார்தாமே. 6

1 தாம்வணங்கா

அகலகிலாத்திருமகளாரன்பர்வந்தார்
அடியிரண்டுமாருகத்தந்தார்வந்தார்
புகலில்லார்புகலாகும்புனிதர்வந்தார்
பொன்னுலகில்திருவுடனேதிகழ்வார்வந்தார்
அகிலமெலாமானந்தமானார்வந்தார்
அடியிணைக்கீழ்வைத்தடிமைகொள்வார்வந்தார்
பகல்நடுவேயிரவழைக்கவல்லார்வந்தார்
பகலொன்றாயிரவழித்தார்வந்தார்தாமே. 7

தருமன்விடத்தாந்தூதுபோனார்வந்தார்
தரணிபொறுத்திண்பாரந்தவிர்த்தார்வந்தார்
அருமறையின்பொருளனைத்தும்விரித்தார்வந்தார்
'அஞ்சினநீயென்னையடை'யென்றார்வந்தார்
தருமமெலாந்தாமாகிநிற்பார்வந்தார்
தாமேநம்வினையனைத்துந்தவிர்ப்பார்வந்தார்
'பரமெனதுநீபுலம்ப'லென்றார்வந்தார்
பார்த்தனுக்குத்தேரூர்ந்தார்வந்தார்தாமே. 8

வஞ்சனைசெய்பூதனையைமாய்த்தார்வந்தார்
மல்லர்மதகரிமாளமலைந்தார்வந்தார்
கஞ்சனைப்போர்க்கடுஞ்சினத்தாற்கடிந்தார்வந்தார்
கன்றுதல்முன்வாணன்தோள்கழித்தார்வந்தார்
வெஞ்சொல்தரவீடுகொடுத்துகந்தார்வந்தார்
விலக்கில்லாவழிநடத்தவிரைந்தார்வந்தார்
பஞ்சவரைப்பலவகையுங்காத்தார்வந்தார்
பாஞ்சாலிகுழல்முடித்தார்வந்தார்தாமே. 9

* அத்திகிரியருளாளப்பெருமாள்வந்தார்
ஆனைபரிதேரின்மேலழகர்வந்தார்
கச்சிதனிற்கண்கொடுக்கும்பெருமாள்வந்தார்
கருதவரந்தருதெய்வப்பெருமாள்வந்தார்
முத்திமழைபொழியுமுகில்வண்ணர்வந்தார்
மூலமெனவோலமிடவல்லார்வந்தார்
உத்தரவேதிக்குள்ளேயுதித்தார்வந்தார்
உம்பர்தொழுங்கழலுடையார்வந்தார்தாமே. 10

* மறைத்தலையிலிசையெழுத்தில்வணங்கும்வாக்கில்
மந்திரத்தில்நாலெழுத்தாந்திருநாமத்தில்
நிறைத்திலகுவேற்றுமையிலிரண்டாமொன்றில்
நெடுமால்தன்கீதையெலாநிறைந்தசொல்லில்
உறைத்தவர்கண்டுரைத்தபொருளானவெல்லாம்
உயர்விரதஅருளாளப்பெருமாள்தேசின்
திறத்திலிவைதிருச்சின்னமாலைபத்தும்
செவிக்கினிதாஞ்சிற்றின்பமிசையாதார்க்கே. 11

## திருச்சின்னமாலை முற்றிற்று

சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான்திருவடிகளே சரணம்

........................

அடிவரவு— ஈருலகை, அருமறையை, அனைத்து, நாம்வணங்க, உலகெல்லாம், அருளாலே, அகலகிலா, தருமன், வஞ்சனை-மாய்த்தார், அத்திகிரி, மறைத்தலை., கேசவனை்

ஸ்ரீ:

# பன்னிருநாமம்

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

தனியன்

𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌦𑌯𑌾𑌪𑌾𑌤𑍍𑌰𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌭𑍂𑌷𑌣𑌂 ।
𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌵𑍇𑌙𑍍𑌕𑌟𑌨𑌾𑌥𑌾𑌰𑍍𑌯𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌦𑍇𑌶𑌿𑌕𑌂 ॥

சீரொன்று தூப்புல் திருவேங் கடமுடையான்
பாரொன்றச் சொன்ன பழமொழியுள்—ஓரொன்று
தானே அமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு
வானேறப் போமளவும் வாழ்வு.

பன்னிரு நாமந் திருவத்தி யூர்ப்பரன் பாதமென்று
நன்னிற நாமம் படைதிக்கும் யாவையு நாமறியத்
தென்னந் தமிழ்த்தொடைச் சீரார் கலித்துறை யோதியீந்தான்
மின்னுறு நூலமர் வேங்கட நாதனெந் தேசிகனே.

கார்கொண்ட மேனியன் பாதாம் புயத்தைக் கருத்திருத்தி
ஏர்கொண்ட கீர்த்தி யிராமா நுசன்ற னிணையடிசேர்
சீர்கொண்ட தூப்புல் திருவேங்க டாரியன் சீர்மொழியை
ஆர்கொண்டு போற்றினு மம்மால் பதத்தை யடைவிக்குமே.

---

❋ கேசவனாய்நின்று கீழைத்திசையிலுநெற்றியிலும்
தேசுடையாழிகள்நான்குடன் செம்பசும்பொன்மலைபோல்
வாசிமிகுத்தெனை மங்காமற்காக்குமறையதனால்
ஆசைமிகுத்த அயன்மகவேதியிலற்புதனே. 1

நாரணனாய் நல்வலம்புரிநாலுமுகங்கெடுத்தும்
[1]ஊரணிமேகமெனவே உதரமுமேற்குநின்றும்
ஆரணநூல்தந்தருளால் அடைக்கலங்கொண்டருளும்
வாரணவெற்பில் மழைமுகில்போல்நின்றமாயவனே. 2

மாதவநாமமும் வான்கதைநான்குமணிநிறமும்
ஓதுமுறைப்படியேந்தி உரத்திலுமேலுநல்கிப்
போதலர்மாதுடன் புந்தியிலன்பாற்புகுந்தளிக்கும்
தூதனுநாதனுமாய தொல்லத்திகிரிச்சுடரே. 3

கோவிந்தனென்றுங்குளிர்மதியாகிக் கொடியவரை
ஏவுந்தனுக்களுடன் தெற்கிலுமுட்கழுத்துநின்று
மேவுந்திருவருளால் வினைதீர்த்தெனையாண்டருளும்
பூவன்தொழ அத்திமாமலைமேல்நின்றபுண்ணியனே. 4

விட்டுவலவயிற்றின்கண் வடக்கும்விடாதுநின்று
மட்டவிழ்தாமரைத்தாது நிறங்கொண்டமேனியனாய்த்
தொட்டகலப்பைகள் ஈரிரண்டாலுந்துயரறுக்கும்
கட்டெழிற்சோலைக் கரிகிரிமேல்நின்றகற்பகமே. 5

மதுசூதனனென்வலப்புயம் தென்கிழக்கென்றிவற்றில்
பதியாயிருந்து பண்மாதுறைபங்கயவண்ணனுமாய்
முதுமாவினைகளறுக்கும் முயலங்களீரிரண்டால்
மதுவாரிளம்பொழில் வாரணவெற்பின்மழைமுகிலே. 6

1 காரணி, ஏரணி

திரிவிக்கிரமன் திகழ்தீநிறத்தன் தெளிவுடைவாள்
உருவிக்கரங்களில் ஈரிரண்டேந்திவலக்கழுத்தும்
செருவிக்கிரமத்தரக்கர்திக்கும் சிறந்தாளுமிறை
மருவிக்கரிகிரிமேல் வரந்தந்திடுமன்னவனே. 7

வாமனனென்றன்வாமோதரமும் வாயுவின்திசையும்
தாமமடைந்து கருண அருக்கனிறத்தனுமாய்ச்
சேமமரக்கலம் செம்பவிரீரிரண்டால்திகழும்
நாமங்கைமேவிய நான்முகன்வேதியில்நம்பரனே. 8

சீரார்சிரீதரனாய்ச் சிவன்திக்குமிடப்புயமும்
ஏராரிடங்கொண்டு இலங்குவெண்டாமரைமேனியனாய்ப்
பாராயபட்டயம் ஈரிரண்டாலும்பயமறுக்கும்
ஆராவமுது அத்திமாமலைமேல்நின்றஅச்சுதனே. 9

[1]என்னிடிகேசனிறை கீழிடக்கழுத்தென்றிவற்றில்
நன்னிலைமின்னுருவாய் நாலுமுற்கரங்கொண்டளிக்கும்
பொன்னகில்சேர்ந்தலைக்கும் புனல்வேகைவடகரையில்
தென்னனுகந்துதொழும் தேனவேதியர்தெய்வமொன்றே.

எம்பற்பநாபனும் என்பின்மனம்பற்றிமன்னிநின்று
வெம்பொற்கதிரவனாயிரம் மேவியமெய்யுருவாய்
அம்பொற்கரங்களில்ஐம்படைகொண்டஞ்சலென்றளிக்கும்
செம்பொற்றிருமதிள்சூழ் சிந்துராசலச்சேவகனே. 11

1 'இருடிகேசன்' எனுஞ்சொல் இங்ஙனே மருவியது

※ தாமோதரனென்றன் தாமங்கள்நாலுகரங்களிற்கொண்டு
ஆமோ!தரமென ஆகத்தினுட்புறம்பிற்கழுத்தும்
தாமோரிளங்கதிரோனென என்னுளிருளறுக்கும்
மாமோகமாற்றும் மதிளத்தியூரின்மரகதமே. 12

※ கத்தித்திரியுங்கலைகளைவெல்லும் கருத்தில்வைத்துப்
பத்திக்குறுதுணை பன்னிருநாமம்பயில்பவர்க்கு
முத்திக்குமூலமெனவேமொழிந்த இம்மூன்றுநான்கும்
தித்திக்குமெங்கள் திருவத்தியூரரைச்சேர்பவர்க்கே. 13

பன்னிருநாமம் முற்றிற்று

சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான்திருவடிகளே சரணம்

---

அடிவரவு— கேசவன், நாரணன், மாதவநாமம், கோவிந்தன், விட்டு, மதுசூதனன், திரிவிக்கிரமன், வாமனன், சீரார், என்னிடி - கேசன், எம்பற்பநாபன், தாமோதரன், கத்தி., நாவலர்

ஸ்ரீ:

# திருமந்திரச்சுருக்கு

சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான்திருவடிகளே சரணம்

ராமாநுஜதயாபாத்ரம் ஜ்ஞாநவைராக்யபூஷணம் |
ஸ்ரீமத்வேங்கடநாதார்யம் வந்தே வேதாந்ததேசிகம் ||

சீரொன்று தூப்புல் திருவேங் கடமுடையான்
பாரொன்றச் சொன்ன பழமொழியுள்—ஓரொன்று
தானே அமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு
வானேறப் போமளவும் வாழ்வு.

---

❋நாவலர்மறைநாலொன் றும்நலந்திகழ்மறையொன்றோது
ஆவலிப்பலைக்குமோகத்து அழுந்திநின்றலமர்கின்றீர்!
தூவலம்புரியாமொன்றில் துவக்கமாம்வண்ணமொன்றால்
காவலென்றகரத்தவ்வாய்க் கருத்துறக்காண்மினீரே. 1

இளக்கமில்மயக்கந்தன்னால் 'எனக்கியானுரிய'னென்னும்
களக்கருத்தொன்றேகொண்டு கடுநரகடைந்துநின்றீர்!
விளக்குமவ்வெழுத்தின் நாலாம்வேற்றுமையேற்றிவாங்கித்
துளக்கமிலடிமைபூண்டு தூயராய்வாழ்மினீரே. 2

'அ'ப்பொருளிகந்து மற்றுங்கழித்தழிந்தெழுவார்தாளில்
இப்பொருளிகந்தவன்பால் இரங்கினிர்வணங்கிவீழ்ந்தீர்!
'உ'ப்பொருளுள்ளி மற்றோருயிர்தனக்குரிமைமாற்றி
எப்பொருட்பயனுமீதென்று எண்ணினிரெழுமினீரே. 3

என்றுமோரேதமின்றி இரவியுமொளியும்போல
ஒன்றிநின்றுலகளிக்கும் உகமிகந்தடிமைவைத்திர்!
ஒன்றுமூன்றெழுத்தாயொன்றும் ஒன்றிலொன்றுடையமுன்னே
ஒன்றியவிரண்டையுள்ளி உளரெனவுய்ம்மினீரே. 4

தத்துவமறுநான்கோடு தனியிறையன்றிநின்ற
சித்தினையுணராதென்றும் திரள்தொகையாகிநின்றீர்!
'ம'த்தனைத்தனிவிடாதே மையிலாவிளக்கமாக்கி
உத்தமனடிமையான உயிர்நிலையுணர்மினீரே. 5

தனதிவையனைத்துமாகத் தானிறையாகுமாயன்
'உன'தெனுமுணர்த்திதாராது உமக்குநீருரிமையுற்றீர்!
'எனதிவையனைத்தும் யானேயிறை'யெனுமிரண்டுந்தீர
'மந'வெனுமிரண்டின் மாறுவல்வினைமாற்றுவீரே. 6

அழிவிலாவுயிர்கட்கெல்லாம் அருக்கனையழியாவீசன்
வழியலாவழிவிலக்கும் மதியெழமாயமூர்த்தி
வழுவிலாதிவையனைத்தும் வயிற்றில்வைத்துமிழ்ந்தமாலை
நழுவிலா'நார'வாக்கில் நாடிநீர்நணுகுவீரே. 7

வயனமொன்றறிந்துரைப்பார் வன்கழல்வணங்கவெள்கி
நயனமுள்ளின்றிநாளும் நள்ளிருள்நண்ணிநின்றீர் !
'அயனமிவ்வனைத்துக்குந்தான் அவைதனக்கயன'மென்னப்
பயனுமாய்ப்பதியுமான பரமனைப்பணிமினீரே. 8

❊ உயர்ந்தவருணர்ந்தவாற்றால் உவந்தகுற்றேவலெல்லாம்
அயர்ந்துநீரைம்புலன்கட்கு அடிமைபூண்டலமர்கின்றீர்!
பயந்திவையனைத்துமேந்தும் பரமனார்நாமமொன்றில்
வியந்தபேரடிமைதோற்றும் 'வேற்றுமை'மேவுவீரே. 9

❊ எண்டிசைபரவுஞ்சீரோர் எங்களுக்கீந்தவெட்டில்
உண்டவாறுரைப்பார்போல ஒன்பதுபொருளுரைத்தோம்
பண்டுநான்மறையோர்காக்கும் மாநிதியிவையனைத்தும்
கண்டவர்விள்ளார் விள்ளக்கருதுவார்காண்கிலாரே. 10

## திருமந்திரச்சுருக்கு முற்றிற்று

சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான்திருவடிகளே சரணம்

---

அடிவரவு— நாவலர், இளக்கம், அப்பொருள், என்றும், தத்துவமறு, தனதிவை, அழிவிலா, வயனம், உயர்ந்தவர், எண்டிசைபரவும்., இன்னமுதில்

ஸ்ரீ:

# தூயசுருக்கு

தனியன்

சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

ராமாநுஜதயாபாத்ரம் ஜ்ஞாநவைராக்யபூஷணம் |
ஸ்ரீமத்வேங்கடநாதார்யம் வந்தே வேதாந்ததேசிகம் ||

சீரொன்று தூப்புல் திருவேங் கடமுடையான்
பாரொன்றச் சொன்ன பழமொழியுள்—ஓரொன்று
தானே யமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு
வானேறப் போமளவும் வாழ்வு.

---

✻ இன்னமுதிற்பிறந்தாளிதங்கேட்க உரைத்தபிரான்
பொன்னருளால்மறைமௌலியிற்பூண்டவிரண்டிசைத்துத்
தன்னுரைமிக்கதனமிதெனத் தந்தவேதகத்தில்
துன்னுபொருள்கள்பத்தும் தொலையாநிதியாகின்றவே. 1

அருவுருவானவைதன்னையடைந்திடத் தானடைந்து
வெருவுரைகேட்டுஅவைகேட்பித்து அகற்றும்வினைவிலக்கி
இருதலையன்புதனால் எமையின்னடிசேர்த்தருளும்
திருவுடனேதிகழ்வார் செறிந்தாரெங்கள்சிந்தையுளே. 2

ஓருயிராய்நின்ற ஒண்சுடரின்பவுருத்தனிலும்
பேருருவத்திலும் பின்னதில்தோற்றமுருக்களிலும்
ஓருருவானவுலகிலும் ஏற்குமுருக்களினால்
சேருதல்மன்னுசெய்யாளன்பர் நம்மனஞ்சேர்ந்தனரே. 3

காரணமாயிறையாய்க் கதியாயமரும்பதியாய்
ஆரணமோதுமனைத்துறவாய் அகலாவுயிராய்ச்
சீரணியுஞ்சுடராய்ச் செறிந்தெங்குந்திகழ்ந்துநின்ற
நாரணனார்நமக்காய்நல்கி நாந்தொழநின்றனரே. 4

வானமர்மன்னுருவாய் வகையாலதில்நாலுருவாய்
மீனமதாமைகேழல் முதலாம்விபவங்களுமாய்
ஊனமருள்ளுருவாய் ஒளியாதஅருச்சையுமாம்
தேனமர்செங்கழலான் சேர்த்தனன்கழலெம்மனத்தே.

வேறொரணங்குதொழும்வினைதீர்த்து எமையாண்டிடுவான்
ஆறுமதன்பயனும் தந்தளிக்குமருளுடையான்
மாறிலதாயிலகும் மதுமெல்லடிப்போதிரண்டால்
நாறுதுழாய்முடியான் நமக்குச்சரணாயினனே. 6

பெறுவதுநாம்பெரியோர்பெறும்பேறெனநின்றவெமை
வெறுமையுணர்த்தி விலக்காதநன்னிலையாதரிப்பித்து
உறுமதியால்தனை ஒண்சரணென்றவுணர்வுதந்த
மறுவுடைமார்பனுக்கே மன்னடைக்கலமாயினமே. 7

அருமறையாதுந்துறவோமென அறிந்தார்கவரும்
கருமமுஞானமுங்காதலுங்கண்டு முயலகிலோம்
வருவதுமிங்கிலையாய் மயலுற்றவெமக்குளதோ ?
திருமகளார்பிரியாத் திருமாலன்றிநற்சரணே. 8

சுருங்காவகிலமெலாம் துளங்காவமுதக்கடலாய்
நெருங்காதனைத்துடனேநின்ற நந்திருநாரணனார்
இரங்காதகாலங்களெல்லாமிழந்த பயன்பெற, ஓர்
பெருங்காதலுற்று இனிமேற்பிரியாமையுகந்தனமே. 9

கடிசூடுமூன்றும் கழல்பணிந்தார்க்குக்கடிந்திடவே
முடிசூடிநின்ற முகில்வண்ணனூர்முன்னுலகளந்த
அடிசூடுநாமவராதரத்தால் உடுத்துக்களையும் -
படிசூடி, அன்புடனே பணிசெய்யப்பணிந்தனமே. 10

❋ 'தனதன்றிவை'யெனத்'தானன்'றென மறை -
சொன்னவெலாம்
'என'தென்றும்'யா'னென்றுமெண்ணுதலால் வரு -
மீனமெலாம்
மனதொன்றியின்று 'நம'வென்றதேகொண்டு -
மாற்றுதலால்
தனதன்றியொன்றுமிலாத் தனித்தாதை -
சதிர்த்தனனே. 11

❋ சேர்க்குந்திருவாளர்சேர்த்தியில்மன்னுதல்
சீர்ப்பெரியோர்க்கு
ஏற்குங்குணங்கள் இலக்காம்வடிவிலிணையடிகள்
பார்க்குஞ்சரணத்திற்பற்றுதல் நந்நிலைநாம்பெறும்பேறு
ஏற்கின்றவெல்லைகளெல்லாம் களையறவெண்ணினமே.

துயச்சுருக்கு முற்றிற்று

சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான்திருவடிகளே சரணம்

---

அடிவரவு— இன்னமுதில், அருவுரு-தன்னை, ஓருயிர், காரண-மாயிறை, வானமர், வேறோர், பெறுவது, அருமறையாதும், சுருங்கா, கடிசூடு, தனதன்று, சேர்க்குந்திருவாளர்., கல்லார்

ஸ்ரீ:

# சரமச்லோகச்சுருக்கு

சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான்திருவடிகளே சரணம்

தனியன்

ராமாநுஜ தயாபாத்ரம் ஜ்ஞாந வைராக்ய பூஷணம் ।
ஸ்ரீமத் வேங்கடநாதார்யம் வந்தே வேதாந்த தேசிகம் ॥

சீரொன்று தூப்புல் திருவேங் கடமுடையான்
பாரொன்றச் சொன்ன பழமொழியுள்— ஓரொன்று
தானே அமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு
வானேறப் போமளவும் வாழ்வு.

---

✳ கல்லாரகலும் கருமமுஞானமுங்காதலும், மற்-
றெல்லாநிலைகளுக்கேற்ப விதித்தகிரிசைகளும்
வல்லார்முயல்க வலியிழந்தாரென்றனைத்தொழுகென்று
எல்லாத்தருமமுரைத்தவன் இன்னடிசேர்ந்தனமே. 1

வெறுமையுணர்ந்துஅதுமுன்னிட்டு வேறங்கமில்லையெனக்
குறியவனின்னறவெட்டக் குறித்திடுங்கோணைதுறந்து
உறும்அயனத்திரமென்னப் பொருநிலையோர்ந்திட, ஓர்-
அறநெறியன்றுரைத்தான் அழியாவறமாயினனே. 2

வாரிதிவிட்டு மலர்மகளோடுமதுரைவந்து
பாரதவெஞ்சமர் பார்மகள்பாரஞ்செகவுகந்து
சாரதியாய்முன்புதூதனுமாய்த் தளரும்விசயன் -
தேரதில்நின்று, அவனைத்தேற்றினன்திறமாயினமே. 3

தன்னருளாற்பெறுஞ்சாதனம் சாதகனென்றிவற்றைத்
தன்னுடனெண்ணுதல்நீங்கத் தனித்தொருசாதனமாய்ப்
பொன்னருளோடுமப்பூமகளோடும் புகழநின்ற
இன்னுரையீசனையே ஏகமெண்ணவிசைந்தனமே. 4

ஊனிலிணைத்துழல்விக்கும் வினைக்கடலுள்விழுந்த
யானெனதானகுணங்கள் எனக்கிசைநல்வழியும்
தானுதவித்தனைத்தந்திடநின்ற தனித்தருமம்
நானினிவேறோர்பரம் நணுகாவகைநல்கியதே. 5

கடுவினைநாம்பெறும்பேற்றைத் தகைந்தமை -
கண்டு, நம்மேல் -
நடைவிலகாமலிசைந்து ஒருகாலந்துணிவுடனே
உடைமையடைக்கலமாக அடைக்குமுகப்பதனால்
அடையெனவன்றுரைத்தான் அடைவித்தனன் -
தன்னடியே. 6

கானென்றவேதங்கள் கற்கும்பரனென்றுகாட்டநின்ற
தானென்றறியகிலார்க்கு அறிவிக்குந்தனித்திறலோன்
வானென்றிஹரொடு மானிடனென்னவவதரிப்பான்
நானென்றநந்திருமால் நமைநற்பதஞ்சேர்த்திடுமே. 7

தன்னிலைகாட்டித்தனிமையுகந்து தனித்தகவால்
நந்நிலைதீரவடைக்கலங்கொண்டு அடிசேர்த்திடவே
பன்னிலைமூலவெழுத்திலும் பாண்டவன்தேர்தனிலும்
முன்னிலைகொண்டபிரான் எமைமுன்னிலைகொண்டனனே.

காடுகளோ! நரகோ! கடிதாங்கரளத்திரளோ !
சூடுவிடாவனலோ! தொலையாநிலைநள்ளிருளோ !
சாடுபடச்சரணல் அன்றுசாடியசாரதியார்
வீடுசெய்வித்துநமை விடுவிக்கின்றபாவங்களே. 9

❋ சென்றுயர்வானமர்ந்து அவ்வடியாருடன்சேர்ந்திடவே
இன்றெனிலின்று நாளையெனில்நாளை, இனிச்சிறிது -
நின்றநிலைநின்னனைத்துவினையும் நின்விட்டகலக்
கன்றிவிடுப்பனென்றான் கருத்தால்நமைக்காத்திடுமே.

❋ அறிவுமனைத்துமிலாவடியோமை அடைக்கலங்கொண்டு
உறவெனநின்றவெலாம் உறவேநின்றதானெமக்காய்
மறுபிறவித்துயர்வாராவகை மனங்கொண்டகலா
இறையவனின்னருளால் எங்கள்சோகந்தவிர்த்தனனே.

சரமசுலோகச்சுருக்கு முற்றிற்று

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான்திருவடிகளே சரணம்

---

அடிவரவு— கல்லார், வெறுமை, வாரிதி, தன்னருளால், ஊனில், கடுவினை, காலென்ற, தன்னிலை, காடுகளோ, சென்றுயர், அறிவும்., கருமமும்

ஸ்ரீ:

# கீதார்த்தசங்கிரகம்

சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான்திருவடிகளே சரணம்

தனியன்

ராமாநுஜதயாபாத்ரம் ஜ்ஞாநவைராக்யபூஷணம் |
ஸ்ரீமத்வேங்கடநாதார்யம் வந்தே வேதாந்ததேசிகம் ||

சீரொன்று தூப்புல் திருவேங் கடமுடையான்
பாரொன்றச் சொன்ன பழமொழியுள்—ஓரொன்று
தானே அமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு
வானேறப் போமளவும் வாழ்வு.

கட்டப் பொருள்விரித்த காசினியில் நான்மறையின்
இட்டப் பொருளியம்பு மின்பொருளைச்—சிட்டர்தொழும்
வேதாந்த தேசிகனை மேவுவார் தங்கள்திருப்
பாதாம் புயமடியேன் பற்று.

கீதை மொழிந்தருளும் வேதாந்த தேசிகனார்
பாதார விந்தமலர் பற்று.

---

※ கருமமுஞானமுங்கொண்டெழும் காதலுக்கோ -
ரிலக்கென்று
அருமறையுச்சியுள் ஆதரித்தோதுமரும்பிரமம்
திருமகளோடுவரும் திருமாலென்றுதானுரைத்தான்
தருமமுகந்ததனஞ்சயனுக்கு அவன்சாரதியே. 1

உகவையடைந்தவுறவுடையார் பொரவுற்றவந்நாள்
தகவுடனன்புகரைபுரளத் தருமத்தளவில்
மிகவுளமஞ்சிவிழுந்து அடிசேர்ந்தவிசயனுக்கு, ஓர் -
நகையுடனுண்மையுரைக்க அமைந்தனன்நாரணனே. 2

உடலமழிந்திடும் உள்ளுயிரொன்றழியாதெனைப்போல்
விடுமதுபற்று விடாததடைத்தகிரிசைகளே
கடுகவுனக்குயிர்காட்டுநினைவு அதனுள்ளதாம்
விடுமயலென்று விசயனைத்தேற்றினன்வித்தகனே. 3

சங்கந்தவிர்ந்து சகஞ்சதிர்பெற்றதனஞ்சயனே!
பொங்குங்குணங்கள்புணர்ப்பனைத்தும் புகவிட்டவற்றுள்
நங்கணுரைத்தகிரிசையெலாம் எனவும்நவின்றோர்
எங்குமறிவர்களேயென்று நாதனியம்பினனே. 4

பிறவாமைதந்திடத் தானேபிறக்கும்பெருமைகளும்
துறவாக்கிரிசைகள் தூமதிதன்னால்துலங்குகையும்
இறவாவுயிர்நன்னிலைகண்டிடும் உலகின்நிலையும்
மறைவாழுமாயவன் நேயனுக்கன்றறிவித்தனனே. 5

கண்டெளிதாங்கரு[1]மம் உயிர்காட்டுங்கடுகுதலும்
மண்டிஅதன்படியில் மனங்கொள்ளும்வரிசைகளும்
கண்டறியாவுயிரைக் காணலுற்றநினைவுகளும்
வண்டுவரேசனியம்பினன் வாசவன்மைந்தனுக்கே. 6

யோகமுயற்சியும் யோகிற்சமநிலைநால்வகையும்
யோகினுபாயமும் யோகுதனால்வரும்பேறுகளும்
யோகுதனில்தன்திறமுடை யோகுதன்முக்கியமும்
நாகணையோகிநவின்றனன் நன்முடிவீரனுக்கே. 7

1 'மம்முயிர்' என விரித்தல் கொண்டு அலகிடுக

தானின்றவுண்மையைத் தன்தனிமாயைமறைத்தமையும்
தானன்றிமாயைதனைத்தவிர்ப்பான் விரகற்றமையும்
மேனின்றபத்தர்கள்நால்வரில் ஞானிதன்மேன்மைகளும்
தேனின்றசெங்கழலான் தெளிவித்தனன்பார்த்தனுக்கே.

ஆராதசெல்வமும் ஆருயிர்காணுமரும்பயனும்
பேராதுதன்கழற்கீழ் அமரும்பெருவாழ்ச்சிகளும்
சோராதுகந்தவர் தூமதிகொள்வதுஞ்செய்வனவும்
தேராவிசயனுக்குத் திருநாரணன்செப்பினனே. 9

தன்மேன்மையும் தன்பிறப்பில்தளராத்தனிமையையும்
பன்மேனிநண்ணினன்பால் பிரியாவன்பராசைகளும்
புன்மேனிவிண்ணவர்பால் புரியாததன்பத்தியையும்
நன்மேனிநாரணன்றான் நரனுக்குநவின்றனனே. 10

எல்லையிலாததன்சீலமாம் இன்னமுதக்கடலும்
எல்லையிலாதவிபூதியெலாம் தனதானமையும்
எல்லையில்பத்திதனையெழுவிக்கத் திருவருளால்
எல்லையிலீசனியம்பினன் இந்திரன்மைந்தனுக்கே. 11

எல்லாந்தனக்குருவாயிலங்கும்வகை தானுரைத்துச்
'சொல்லாலறிந்தது சோராமற்கண்டிடவேண்டு'மென்ற
வில்லாளனுக்கன்று மெய்க்கண்கொடுத்திதுவே றுமுண்டோ
நல்லார்கள்காண்பரென்றுந் நவின்றான்நங்கள்நாயகனே.

தன்கழலில் பத்திதாழாததும், அதன்காரணமாம் -
இன்குணர்சிந்தையும் ஈதறியார்க்கவ்வடிமைகளும்
தன்கருமங்களறியாதவர்க்கு இலகுகிலையும்
தன்கழலன்பர்க்குநல்லவன் சாற்றினன்பார்த்தனுக்கே.

ஊனின்படியும் உயிரின்பிரிவும், உயிர்பெறுவார் -
ஞானம்பெறுவகையுஞ் ஞானமீன்றவுயிர்ப்பயனும்
ஊனின்றதற்கடி[1]யும் உயிர்வேறிடுமுள்விரகும்
தேனின்றபாதன் தெளிவித்தனன்சிலைப்பார்த்தனுக்கே.

முக்குணமேயுயிர்முற்றவுங்கட்டிட மூண்டமையும்
முக்குணமேயனைத்தும்வினைகொள்ள முயன்றமையும்
முக்குணமாயைகடத்தலும் முக்கதிதந்தளிப்பும்
முக்குணமற்றபிரான் மொழிந்தான்முடியோன்றனக்கே.

மூவெட்டினும் அதின்மோகமடைந்தவுயிர்களினும்
நாவெட்டெழுத்தொடு நல்வீடுநண்ணினநம்பரினும்
மேவெட்டுவன்குணவிண்ணோர்களினும் விசயனுக்குத்
தாவிட்டுலகளந்தான் தனைவேறென்றுசாற்றினனே. 16

'ஆணைமறுதவர்தேவர் அல்லாவழக்கோரசுரர்
கோணைமராதகுணச்செல்வ! நீகுறிக்கொள்மறையைப்
பேணியதத்துவமும் பிணியற்றகிரிசைகளும்
காணிதனுல்விசயா!' என்று கண்ணனியம்பினனே. 17

1 'யும்முயிர்' என விரித்தல்கொண்டு அலகிடுக.

மறைபொருந்தாதவை வல்லசுரர்க்குவகுத்தமையும்
மறைபொருந்துந்நிலையின் வன்குணப்படிமூவகையும்
மறைநிலைதன்னைவகுக்கும் குறிமூன்றின்மேன்மையையும்
மறையுமிழ்ந்தானுரைத்தான் வாசவன்றன்சிறுவனுக்கே.

சத்துவவீடுடைநற்கருமம் தானுகந்தமையும்
சத்துவமுள்ளது தான்குறிக்கொள்வகைசெய்ததுவும்
சத்துவநற்கிரிசைப்பயனும் சரணாகதியும்
சத்துவமேதருவானுரைத்தான் தனிப்பார்த்தனுக்கே. 19

※ வன்பற்றறுக்குமருந்தென்று மாயவன்தானுரைத்த
இன்பக்கடலமுதாமெனநின்ற இக்கீதைதனை
அன்பர்க்குரைப்பவர் கேட்பவராதரித்தோதுமவர்
துன்பக்கடலுள்துளங்குகைநீங்கித் துலங்குவரே. 20

※ தீதற்றநற்குணப்பாற்கடல் தாமரைச்செம்மலர்மேல்
மாதுற்ற, மாயன்மருவ இன்கீதையின்வண்பொருளைக்
கோதற்றநான்மறைமௌலியின் ஆசிரியன்குறித்தான்
காதல்துணிவுடையார் கற்கும்வண்ணங்கருத்துடனே. 21

### கீதார்த்தசங்கிரகம் முற்றிற்று

சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான்திருவடிகளே சரணம்

---

அடிவரவு — கருமமும், உகவை, உடலம், சங்கம், பிறவாமை, கண்டெளிது, யோகம், தானின்ற, ஆராதசெல்வம், தன்மேன்மை, எல்லையில் —

எல்லையில், எல்லாம், தன்கழல், ஊனின்படி, முக்குணமே, மூவெட்டின், ஆணை, மறைபொருந்தா, சத்துவ, வன்பற்றறுக்கும், தீதற்ற., அருள்தரும்

---

ஸ்ரீ:

# மும்மணிக்கோவை

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான்திருவடிகளே சரணம்

ராமாநுஜதயாபாத்ரம் ஜ்ஞாநவைராக்ய பூஷணம் |
ஸ்ரீமத் வேங்கடநாதார்யம் வந்தே வேதாந்ததேசிகம் ||

சீரொன்று தூப்புல் திருவேங் கடமுடையான்
பாரொன்றச் சொன்ன பழமொழியுள்—ஓரொன்று
தானே அமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு
வானேறப் போமளவும் வாழ்வு.

---

※ அருள்தருமடியர்பால்மெய்யைவைத்துத்
தெருள்தரநின்றதெய்வநாயக! , நின் -
அருளெனுஞ்சீரோரரிவையானதென
இருள்செகவெமக்கோரின்னொளிவிளக்காய்
மணிவரையன்னநின்திருவுருவில்
அணியமராகத்தலங்கலாயிலங்கி
நின்படிக்கெல்லாந்தன்படியேற்க
அன்புடன்நின்னோடவதரித்தருளி
வேண்டுரைகேட்டுமீண்டவைகேட்பித்து
ஈண்டியவினைகள்மாண்டிடமுயன்று
தன்னடிசேர்ந்ததமருனையணுக
நின்னுடன்சேர்ந்துநிற்குநின்திருவே. 1

திருமாலடியவர்க்குமெய்யனுர் , செய்ய -
திருமாமகளென்றுஞ்சேரும்—திருமார்பில் ,
இன்மணிக்கோவையுடன் ஏற்கின்ருர் , என்றனிம் -
மும்மணிக்கோவைமொழி. 2

மொழிவார்மொழிவனமும்மறையாகும் அயிந்தையில்வந்து
இழிவாரிழிகவென்று இன்னமுதக்கடலாகிநின்ற
விழிவாரருள்மெய்யர்மெல்லடிவேண்டிய மெல்லியர்மேல்
பொழிவாரனங்கர் தம்பூங்கரும்புந்தியபூமழையே. 3

மழையிலெழுந்தமொக்குள்போல்வையம்
அழியவொன்றழியா அடியவர்மெய்ய !
அருமறையின்பொருளாய்த்தெடுக்குங்கால்
திருவுடனமர்ந்ததெய்வநாயக !
நின்திருத்தனக்குநீதிருவாகி
இந்துதன்னிலவுடனிலங்குதன்மையினை
நந்துதலில்லாநல்விளக்காகி
அந்தமிலமுதவாழியாய்நிற்றி
பார்க்கடல்தன்னிற்பன்மணியன்ன
சீர்க்கணஞ்சேர்ந்தசீலமெல்லியலே
அடியவர்பிழைகள்நின்கருத்தடையாது
அடையவாண்டருளுமரசனுநீயே
உயர்ந்தநீயுன்னையெம்முடன்கலந்தனை
அயிந்தைமாநகரிலமர்ந்தனையெமக்காய்ச்
சித்திரமணியெனத்திகழுமன்னுருவில்
அத்திரமணியெனவணைத்துநீயணுகி

விண்ணுளமர்ந்தவியனுருவதனால்
எண்ணியவீரிரண்டுருக்களுமடைதி
பன்னிருநாமம்பலபலவுருவாய்
என்னுருவெங்குமெய்திநீநிற்றி
மீனேடாமைகேழல்கோளரியாய்
வானர்குறளாய்மழுப்படைமுனியாய்ப்
பின்னுமிராமரிருவராய்ப்பாரில்
துன்னியபரந்தீர்துவரைமன்னனுமாய்க்
கலிதவிர்த்தருளுங்கற்கியாய்மற்றும்
நலிவதற்கெண்ணும்வல்வினைமாற்ற
நானுவுருவங்கொண்டுநல்லடியோர்
வானரின்பமிங்குறவருதி
ஒருயிருலகுக்கென்னுநீதிருவொடு
ஏருயிரெல்லாமேந்தியின்புறுதி
யாவருமறியாதெங்குநீகரந்து
மேவுருச்சூழ்ந்துவியப்பினல்மிகுதி
கொண்டிடவெம்மையடைக்கலமுலகில்
கண்டிலங்கதியுனையன்றிமற்றென்றும்
பல்வகைநின்றநின்படியனைத்தினும்
தொல்வகைகாட்டுந்துணிந்துதூமறையே.

தூமறையினுள்ளம் துளங்காத்துணிவுதரும்
ஆமறிவாலார்ந்தடிமையாகின்றேம்—பூமறையோன்
பாராயணத்திற்பணியும் அயிந்தைநகர்
நாராயணனர்க்கேநாம்.

ஆர்க்குங்கருணைபொழிவான் அயிந்தையில்வந்தமர்ந்த
கார்க்கொண்டலைக்கண்ட காதற்புனமயில்கண்பனியா
வேர்க்குமுகிழ்க்கும் விதிர்விதிர்க்கும் வெள்கிவெவ்வுயிர்க்கும்
பார்க்கின்றவர்க்கிது நாமென்கொலென்றுபயிலுவமே?

பயின்மதிநீயேபயின்மதிதருதலின்
வெளியுநீயேவெளியுறநிற்றலின்
தாயுநீயேசாயைதந்துகத்தலின்
தந்தையுநீயேமுந்திநின்றளித்தலின்
உறவுநீயேதுறவாதொழிதலின்
உற்றதுநீயேசிற்றின்பமின்மையின்
ஆறுநீயேயாற்றுக்கருள்தலின்
அறமுநீயேமறநிலைமாய்த்தலின்
துணைவனுநீயேயிணையிலையாதலின்
துய்யனுநீயேசெய்யாளுறைதலின்
காரணநீயேநாரணனாதலின்
கற்பகநீயேநற்பதந்தருதலின்
இறைவனுநீயேகுறையொன்றிலாமையின்
இன்பமுநீயேதுன்பந்துடைத்தலின்
யானுநீயேயென்னுளுறைதலின்
எனதுநீயேயுனதன்றியின்மையின்
நல்லாய்நீயேபொல்லாங்கிலாமையின்
வல்லாய்நீயேவையமுண்டுமிழ்தலின்
எங்ஙனமாகுமெய்ய!நின்வியப்பே
அங்ஙனேயொக்கஅறிவதாரணமே. 7

ஆரணங்கள்தேட அயிந்தைநகர்வந்துதித்த
காரணராய்நின்றகடல்வண்ணர்—நாரணனார் -
இப்படிக்குமிக்கு அன்றெடுத்தபாதங்கழுவ
மெய்ப்படிக்கமானதுபொன்வெற்பு. 8

※ வெற்புடனென்றிஅயிந்தையில்வெவ்வினைதீர்மருந்தொன்று
அற்புதமாகவமர்ந்தமைகேட்டு அருள்வேண்டிநிற்கப்
பற்பிலமர்ந்தசெய்யாள் படிகாட்டியபண்புடை, எம் -
விற்புருவக்கொடிக்கு ஓர்விலங்காமயல்பெற்றனமே. 9

※ பெற்றனைநீயேமற்றுளவெல்லாம்
பெறுவதுநின்னையுறுவதுகொள்வார்
நின்னலன்றிமன்னரின்பம்
நின்பொருட்டுநீயென்பொருட்டில்லை
நின்னுருநின்றுமின்னுருத்தோன்றும்
நின்றனக்குநிகர்நின்னடியடைவார்
நின்பாலன்றியன்பாலுய்யார்
வாரணமழைக்கவந்தகாரணனே! 10

மும்மணிக்கோவை முற்றிற்று

சீரார்தூப்புல். திருவேங்கடமுடையான்திருவடிகளே சரணம்

அடிவரவு— அருள்தரும், பெற்றனை., ஒருமதி

ஸ்ரீ:

# நவமணிமாலை

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

தனியன்

ராமாநுஜதயாபாத்ரம் ஜ்ஞாநவைராக்யபூஷணம் |
ஸ்ரீமத்வேங்கடநாதார்யம் வந்தே வேதாந்ததேசிகம் ||

சீரொன்று தூப்புல் திருவேங் கடமுடையான்
பாரொன்றச் சொன்ன பழமொழியுள் — ஓரொன்று
தானே அமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு
வானேறப் போமளவும் வாழ்வு.

---

❋ ஒருமதியன்பருளங்கவர்ந்தன
உலகமடங்கவளர்ந்தளந்தன
ஒருசடையொன்றியகங்கைதந்தன
உரகபடங்களரங்குகொண்டன

தருமமுயர்ந்ததிதென்னநின்றன
தருமனிரந்ததிசைந்துசென்றன
சகடமுடைந்துகலங்கவென்றன
தமர்களருந்துமருந்திதென்பன

திருமகள்செய்யகரங்களொன்றின
திகழ்துளவுந்துமணங்கமழ்ந்தன
செழுமணிகொண்டசிலம்பிலங்கின
சிலைதனிலன்றரணங்குமிழ்ந்தன

அருமறையந்தமமர்ந்தபண்பின
அயன்முடிதன்னிலமர்ந்துயர்ந்தன
அருள்தரவெண்ணியபிந்தைவந்தன
அடியவர்மெய்யர்மலர்ப்பதங்களே. 1

மகரம்வளருமளவில்பௌவமடையவுற்றலைத்தனை
வடிவுகமடமெனவமர்ந்துகிரிதனைத்தரித்தனை
மலியுமசுரனுரமிடந்துவசுதைபேர்த்தெடுத்தனை
வலிகொளவுணனுடல்பிளந்துமதலைமெய்க்குநித்தனை

பகருமுலகமடியளந்துதமர்களுக்களித்தனை
பரசுமுனிவன்வடிவுகொண்டுபகைவரைத்துணித்தனை
பணியவிசைவில்தசமுகன்றன்முடிகள்பத்துதிர்த்தனை
படியுமுருவில்வருபிலம்பவசுரனைத்தகர்த்தனை

நகரிதுவரையெனவுகந்துவரைகரத்தெடுத்தனை
நடமொடியலுபரியில்வந்துநலிவறுக்கவுற்றனை
நலியும்வினைகள்செகுமருந்தின்நலமுறைந்தவெற்பினை
நணுகுகருடநதிகிளர்ந்தபுனலுகப்பில்வைத்தனை

அகரமுதலவுரைகொள்மங்கைகணவனுக்களித்தனை
அடையும்வினைதைசிறுவனுய்யவருள்கொடுத்துயர்த்தினை
அடியுமணையுமெனுமனந்தனடிதொழக்களித்தனை
அவனிமருவுதிருவயிந்தையடியவர்க்குமெய்யனே! 2

புரமுயர்த்தவசுரர்கட்கு ஓர்புறமுரைத்தபொய்யினன்
வரையெடுத்துமழைதடுத்த மழையொடொத்தமெய்யினன்
திரைநிரைத்தகடலெரித்த சிலைவளைத்தகையினன்
அருள்கொடுத்துவினைதவிர்க்கும் அடியவர்க்குமெய்யனே.

தேசொத்தாரில்லையெனும் தெய்வநாயகனார்
வாசக்குழல்மாமலராள் மணவாளர்
வாசித்தொழுமன்மதனார் மணத்தோப்பில்
மாசிக்கடலாடி மகிழ்ந்துவருவாரே. 4

உருளுஞ்சகடமொன்றுதைத்தாய்!
உலகமேழுண்டுமிழ்ந்தளந்தாய்!
பொருளுமழலுமிறையாகப் -
பூண்டேன் அடிமையினின் மீண்டேன்
இருளும்மருளுந்தருமந்நாள்
எழிலாராழிசங்கேந்தி
அருளுந்தெருளுந்தரவென்பால்
அடியோர்மெய்ய!வந்தருளே. 5

வஞ்சனைசெய்பூதனையைமலியுஞ்சாட்டை
மல்லரையோர்மதகளிற்றைவானோரஞ்சுங் -
கஞ்சனை, முன்கடிந்தவனிபாரந்தீர்த்த -
காவலனே! கோவலனாய்நின்றகோவே!
அஞ்சனமுங்காயாவுமனையமேனி
அடியவர்க்குமெய்யனே! , அயிந்தைவாழும்
[1]மஞ்செனவேயருள்பொழியும்வள்ளலே! நின் -
வடிவழகுமறவாதார்பிறவாதாரே. 6

1 அஞ்சலேனவருள்

மையுமாகடலுமயிலுமாமழையும்
மணிகளுங்குவளையுங்கொண்ட -
மெய்யனே! , அடியோர்மெய்யனே!விண்ணோ -
ரீசனே! நீசனேனடைந்தேன்
கையுமாழியுமாய்க்களிறுகாத்தவனே !
காலனார்தமரெனைக்கவராது
ஐயனே!வந்தன்றஞ்சலென்றருள் தென் -
னயிந்தைமாநகரமர்ந்தானே! 7

மஞ்சுலாவுசோலைசூழயிந்தைமன்னுமன்னுசீர்
வரையெடுத்துநிரையளித்தமாசில்வாசுதேவனே!
செஞ்சொலன்பர்சிந்தைகொண்டுதீதிலாததூதனாய்த்
தேருமூர்ந்துதேசுயர்ந்தசெல்வ!தெய்வநாயக !
வெஞ்சொலாளர்காலதூதர்வீசுபாசம்வந்தென்மேல்
விழுந்தழுந்தியானயர்ந்துவீழ்வதற்குமுன்னநீ
'அஞ்சலஞ்சலஞ்ச'லென்றளிக்கவேண்டுமச்சுதா !
அடியவர்க்குமருளியக்குமடியவர்க்குமெய்யனே!

✻ பொருத்தம்பொருந்தலும் போகின்றவற்றுடன் -
பொய்ம்மதிமேல்
விருத்தங்கலித்துறைமேவுமழன்மதம் பேறினியென் ?
திருத்தமனத்தினிற்சேராவெமைத் தெய்வநாயக! , நின் -
வருத்தம்பொறுவருளால் மன்னடைக்கலங்கொண்டருளே.

✻ அந்தமில்சீரயிந்தைநகரமர்ந்தநாத-

னடியிணைமேல் அடியுரையாலைம்பதேத்திச்

சிந்தைகவர்பிராகிருதநூறுகூறிச்

செந்தமிழ்மும்மணிக்கோவைசெறியச்சேர்த்துப்

பந்துகழலம்மானையூசலேசல்

பரவுநவமணிமாலையிவையுஞ்சொன்னேன்

'முந்தைமறைமொழியவழிமொழிநீ'யென்று

முகுந்தனருள்தந்தபயன்பெற்றேனானே. 10

நவமணிமாலை முற்றிற்று

ஸ்ரீரார்தூப்புல் திருவேங்கடமுடையான்திருவடிகளே சரணம்

---

அடிவரவு— ஒருமதி, மகரம், புரமுயர்த்த, தேசொத்தார், உருளும், வஞ்சனை-மலியும், மையும், மந்த, பொருத்தம், அந்தமில்சீர்., ஆழ்வார்

ஸ்ரீ:

# பிரபந்தசாரம்

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான்திருவடிகளே சரணம்

தனியன்

𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌦𑌯𑌾𑌪𑌾𑌤𑍍𑌰𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌭𑍂𑌷𑌣𑌮𑍍 ।
𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌵𑍇𑌙𑍍𑌕𑌟𑌨𑌾𑌥𑌾𑌰𑍍𑌯𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌦𑍇𑌶𑌿𑌕𑌮𑍍 ॥

சீரொன்று தூப்புல் திருவேங் கடமுடையான்
பாரொன்றச் சொன்ன பழமொழியுள்— ஓரொன்று
தானே அமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு
வானேறப் போமளவும் வாழ்வு.

ஆரணநான் கின்பொருளை யாழ்வார்க ளாய்ந்தடைவே
யன்புடனே யம்புவியோ ரனைவருமீ டேறவென்று
நாரணனூர் தாள்களிலே நாலாயி ரந்தமிழால்
நண்ணியுரை செய்தவற்றை நாடிவகை தொகைசெய்தாய்!
பூரணமா ஞானியர்சேர் பொங்குபுகழ்த் தூப்புல்வரும்
புனிதனென்றும் பிள்ளையென்றும் புவியோர்புகழ் வேங்கடவா !
தாரணியோ ரிங்குகக்கச் சாற்றியநற் ப்ரபந்தசாரந் -
தனையுரைத்து வாழுமனந் தந்தருளா யென்றனக்கே.

ஆதிமறை யோதிமகி ழயக்கிரிவர் தம்மருளால்
அன்புடனே தூப்புல்நகர வதரித்தே யிங்குவந்து
வாதியரை வென்றுவந்து வண்புவிமே லெதிராசர்
வாழ்வுறுநற் றெரிசனத்தை வண்மையுட னேவளர்த்து
நீதிநெறி தவறாமல் நிறுத்தியிடும் வேங்கடவா !
நேசமுட னாழ்வார்கள் நிலைகளையெல் லாமுணர்ந்து
சாதுசனம் வாழவென்று சாற்றியநற் ப்ரபந்தசாரந் -
தனையுரைத்து வாழுமனந் தந்தருளா யென்றனக்கே .

❋ ஆழ்வார்களவதரித்தநாளூர்திங்கள்
அடைவுதிருநாமங்களவர்தாஞ்செய்த
வாழ்வானதிருமொழிகளவற்றுட்பாட்டின்
வகையானதொகையிலக்கமற்றுமெல்லாம்
வீழ்வாகமேதினிமேல்விளங்கநாளும்
விரித்துரைக்குங்கருத்துடனேமிக்கோர்தங்கள்
நீள்பாதமிரந்தரமுந்தொழுதுவாழ்த்தும்
நேசமுடனடியேன்றன்னெஞ்சுதானே. 1

அருள்மிகுத்தவொருவடிவாய்க்கச்சிதன்னில்
ஐப்பசிமாதத்திருவோணத்துநாளில்
பொருள்மிகுத்தமறைவிளங்கப்புவியோருய்யப்
பொய்கைதனில்வந்துதித்தபுனிதா!, முன்னாள்
இருளதனில்தண்கோவலிடைகழிச்சென்று
இருவருடன்நிற்கவுமாலிடைநெருக்கத்
திருவிளக்காமெனும்'வையந்தகளி' நூறும்
செழும்பொருளையெனக்கருள்செய்திருந்தநீயே.

கடன்மல்லைக்காவலனே! பூதவேந்தே!
காசினிமேலைப்பசியிலவிட்டநாள்வந்து
இடர்கடியுந்தண்கோவலிடைகழிச்சென்று
இணையில்லாமூவருமாயிசைந்தேநிற்க
'நடுவிலிவரொருவரு'மென்றறியாவண்ணம்
நள்ளிருளில்மால்நெருக்கநந்தாஞானச்
சுடர்விளக்கேற்றிய, 'அன்பேதகளி'யான
தொடைநூறுமெனக்கருள்செய்துலங்குநீயே. 3

மாமயிலைப்பதியதனில்துலாமாதத்தில்
வருஞ்சதயத்தவதரித்துக்கோவலூரில்
தூமுனிவரிருவருடன் துலங்கநின்று
துன்னியபேரிருள்நீங்கச்சோதிதோன்றச்
சேமமுடனெடுமாலைக்காணப்புக்குத்
'திருக்கண்டே'னெனவுரைத்ததேவே!, உன்றன் -
பாமருவுதமிழ்மாலைநூறுபாட்டும்
பழவடியேனுக்கருள்செய்பரமநீயே. 4

தைம்மகத்தில்வருமழிசைப்பரனே! மற்றைச் -
சமயங்கள்பலதெரிந்து , 'மாயோனல்லால் -
தெய்வம்மற்றில்லை'யெனவுரைத்த வேதச் -
செழும்பொருள்நான்முகன்தொண்ணூற்றாறுபாட்டும்
மெய்ம்மிகுத்ததிருச்சந்தவிருத்தப்பாடல்
விளங்கியநூற்றிருபதுந்தப்பாமல்மெய்யே
வையகத்துமறவாமலுரைத்துவாழும் -
வகை அடியேனுக்கருள்செய்மகிழ்ந்துநீயே. 5

❋ முன்னுரைத்ததிருவிருத்தம்நூறுபாட்டும்
முறையின்வருமாசிரியமேழுபாட்டும்
மன்னியநற்பொருட்பெரியதிருவந்தாதி
மறவாதபடியெண்பத்தேழுபாட்டும்
பின்னுரைத்ததோர்திருவாய்மொழி எப்போதும் -
பிழையறவாயிரத்தொருநூற்றிரண்டுபாட்டும்
இந்நிலத்தில்வைகாசிவிசாகந்தன்னில்
எழிற்குருகைவருமாறு! இரங்குநீயே. 6

தேறியமாஞானமுடன் திருக்கோளூரில்
சித்திரையில்சித்திரைநாள்வந்துதோன்றி
ஆறியநல்லன்புடனேகுருகூர்நம்பிக்கு
அனவரதமந்தரங்கவடிமைசெய்து
மாறனையல்லாலென்றுமறந்தும் 'தேவு -
மற்றறியே'னெனுமதுரகவியே!, நீமுன் -
கூறியகண்ணிநுண்சிறுத்தாம்பதனிற்பாட்டுக்
குலவுபதினொன்றுமெனக்குதவுநீயே. 7

பொன்புரையும்வேற்குலசேகரனே! மாசிப் -
புனர்பூசத்தெழில்வஞ்சிக்களத்துத்தோன்றி
அன்புடனேநம்பெருமாள்செம்பொற்கோயில்
அனைத்துலகின்பெருவாழ்வும், அடியார்தங்கள்-
இன்பமிகுபெருங்குழுவுங்காண மண்மேல் -
'இருளிரிய'வென்றெடுத்த இசையிற்சொன்ன
நன்பொருள்சேர்திருமொழிநூற்றைந்துபாட்டும்
நன்றாகவெனக்கருள்செய்நல்கிநீயே. 8

பேரணிந்தவில்லிபுத்தூரானிதன்னில்
பெருஞ்சோதிதனில்தோன்றும்பெருமானே!,முன்-
சீரணிந்தபாண்டியன்றன்நெஞ்சுதன்னில்
தியக்கறமால்பரத்துவத்தைத்திறமாச்செப்பி
வாரணமேல்மதுரைவலம்வரவே வானில் -
மால்கருடவாகனனாய்த்தோன்றவாழ்த்தும்
ஏரணி'பல்லாண்டு'முதற்பாட்டு நானூற் -
றெழுபத்தொன்றிரண்டுமெனக்குதவுநீயே. 9

* வேயர்புகழ்வில்லிபுத்தூராடிப்பூரம்
மேன்மேலுமிகவிளங்க, விட்டுசித்தன் -
தூயதிருமகளாய்வந்து அரங்கனூர்க்குத் -
துழாய்மாலைமுடிசூடிக்கொடுத்தமாதே!
நேயமுடன்திருப்பாவைப்பாட்டாறைந்தும்
நீயுரைத்த'தையொருதிங்கட்'பாமாலை
ஆயபுகழ்நூறுடன்நாற்பத்துமூன்றும்
அன்புடனேயடியேனுக்கருள்செய்நீயே. 10

மன்னுமதிள்திருமண்டங்குடிதான்வாழ
மார்கழிமாதக்கேட்டைநாளில்வந்து
துன்னுபுகழ்த்தொண்டரடிப்பொடியே! நீமுன் -
துழாய்மாலைப்பணியடிமைசெய்துநாளும்
தென்னரங்கமணவாளர்க்கன்புமிக்குச்
செப்பியநற்றிருமாலைநாற்பத்தைந்தும்
பன்னியநற்றிருப்பள்ளியெழுச்சிபத்தும்
பழவடியேனுக்கருள்செய்பரிந்துநீயே. 11

உலகறியமலிபுகழ்க்கார்த்திகைமாதத்தில்
உரோகிணிநாளுறந்தைவளம்பதியில்தோன்றித்
தலமளந்ததென்னரங்கர்பால் உலோக -
சாரங்கமாமுனிதோள்தனிலேவந்து
பலமறையின்பொருளாற்பாண்பெருமாளே! நீ
பாதாதிகேசமதாய்ப்பாடித்தந்த
சொல'அமலனதிபிரான்'பத்துப்பாட்டும்
சோராமலெனக்கருள்செய்துலங்கநீயே.

✳ அறிவுதரும்பெரியதிருமொழிதப்பாமல்
ஆயிரத்தோடெண்பத்துநாலுபாட்டும்
குறியதொருதாண்டகம்நாலைந்து ஆறைந்தும் -
குலாநெடுந்தாண்டகமெழுகூற்றிருக்கையொன்றும்
சிறியமடற்பாட்டுமுப்பத்தெட்டிரண்டும்
சீர்பெரியமடல்தனிற்பாட்டெழுபத்தெட்டும்
இறையவனே !கார்த்திகையிற்கார்த்திகைநாள்
எழிற்குறையல்வருகலியா ! இரங்குநீயே. 13

✳ தேசமெலாமுகந்திடவேபெரும்பூதூரில்
சித்திரையிலாதிரைநாள்வந்துதோன்றிக்
காசினிமேல்வாதியரைவென்று அரங்கர் -
கதியாகவாழ்ந்தருளுமெதிராசா !, முன் -
பூசுரர்கோன்திருவரங்கத்தமுதனார் உன் -
பொன்னடிமேலந்தாதியாகப்போற்றிப்
பேசியநற்கலித்துறைநூற்றெட்டுப்பாட்டும்
பிழையறவேயெனக்கருள்செய்பேணிநீயே. 14

எண்ணின்முதலாழ்வார்கள்மூன்றுநூறும்
எழின்மழிசைப்பிரானிருநூற்றெருபத்தாறும்
உண்மைமிகுமாறன்மறையாயிரத்தோடு
உற்றஇருநூற்றுத்தொண்ணூறுமாறும்
வண்மையுடைமதுரகவிபத்துமொன்றும்
வஞ்சியர்கோன்நூற்றைந்தும், பட்டநாதன் -
பண்ணியல்நானூற்றேழுபத்துமூன்றும்
பார்க்கோதைநூற்றேழுபத்துமூன்றே. 15

பத்தரடிப்பொடிபாடலைம்பத்தைந்தும்
பாணர்புகல்பத்துடனேபரகாலன்சொல்
அத்தனுயர்வேங்கடமாற்காயிரத்தோடு
ஆன இருநூற்றோரைம்பத்துமூன்றும்
முத்திதருமெதிராசர்பொன்னடிக்கே
மொழிந்தவமுதர்பாடல்நூறுமெட்டும்
எத்திசையும்வாழவிவர்பாடிவைத்த
இவைநாலாயிரமுமடியோங்கள்வாழ்வே. 16

* வையகமெண்பொய்கைபூதம்பேயாழ்வார்
மழிசையர்கோன்மகிழ்மாறன்மதுரகவிகள்
பொய்யில்புகழ்க்கோழியர்கோன்விட்டுசித்தன்
பூங்கோதைதொண்டரடிப்பொடிபாணாழ்வார்
ஐயனருட்கலியனெதிராசர்தம்மோடு
ஆறிருவரோரொருவரவர்தாஞ்செய்த
துய்யதமிழிருபத்துநான்கிற்பாட்டின்
தொகைநாலாயிரமுமடியோங்கள்வாழ்வே. 17

* அந்தமிலாஆரணநாலாகிநின்ற
அதன்கருத்தையாழ்வார்களாய்ந்தெடுத்துச்
செந்தமிழாலருள்செய்தவகைதொகையும்
சிந்தாமலுலகங்கள்வாழவென்று
சந்தமிகுதமிழ்மறையோன்தூப்புல்தோன்றும்
வேதாந்தகுருமொழிந்தப்ரபந்தசாரம்
சிந்தையினலனுதினமுஞ்சிந்திப்போர்க்குச்
சேமமதாந்திருமால்தன்கருணையாலே. 18

பிரபந்தசாரம் முற்றிற்று.

சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான்திருவடிகளே சரணம்.

---

அடிவரவு— ஆழ்வார், அருள்மிகு, கடன்மல்லை, மாமயிலை, தைம்மக, முன்னுரைத்த, தேறிய, பொன்புரை, போணிந்த, வேயர், மன்னுமதின்- மன்னுமதிள், உலகறிய, அறிவுதரும், தேசமெலாம், எண்ணின், பத்தரடி, வையகம், அந்தமிலாவாரணம்., ஆகாரத்து

---

ஸ்ரீ:

# ஆகாரநியமம்

சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான்திருவடிகளே சரணம்

ராமாநுஜதயாபாத்ரம் ஜ்ஞாநவைராக்யபூஷணம் |
ஸ்ரீமத்வேங்கடநாதார்யம் வந்தே வேதாந்ததேசிகம் ||

சீரொன்று தூப்புல் திருவேங் கடமுடையான்
பாரொன்றச் சொன்ன பழமொழியுள்—ஓரொன்று
தானே அமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு
வானேறப் போமளவும் வாழ்வு.

சீராரும் வேதாந்த தேசி கர்கோன்
செழுமறையி னுட்பொருளைச் சிந்தை செய்தே
ஆராய்ந்து வாழ்வுறவிப் புவியோர் தங்கட்கு
அன்புடனே யாகார நியதி சொன்னான்
ஏராரு மெதிராச ரருளி னாலே
எதிர்ந்தவர்கள் சிங்கமென விங்கு வந்தோன்
சீராரும் வேங்கடவன் தூப்புற் பிள்ளை
செழுந்திருத்தா ளிணைமலரென் சென்னி மேலே.

..............................

ஆகாரத்திருவகையாம்நன்றுந்தீதும்
அருமறைகொண்டெதிராசரிவைமொழிந்தார்
ஆகாதவழிவிலக்கியாக்குங்கண்ணன்
அனைத்துலகும்வாழவிதுசாற்றிவைத்தான்
போகாதுபோக்குவிக்குமுனிவர்சொன்ன
பொய்யாதமொழிகளையும்பொருந்தக்கேண்மின்
ஆகாதென்றவைதவிர்ந்து ஆமதுவேகொண்ட
அசகரனுமாகங்காத்தருள்பெற்றானே. 1

வாயிலல்லாவாயிலினல்வந்தசோறும்
வரகுமுதலாகாதென்றுரைத்தசோறும்
வாயினின்றும்விழுமவைதாம்பட்டசோறும்
வாய்க்கொண்டகவளத்தின்மிகுந்தசோறும்
தீயவர்கண்படுஞ்சோறுந்தீதற்சோறும்
சீரையுரைதும்மலிவைபட்டசோறும்
நாய்முதலானவைபார்க்குந்தீண்டுஞ்சோறும்
நாள்தூய்தல்லாச்சோறும்நண்ணுச்சோறே. 2

மனிசர்பசுமுதலானோர்மோந்தசோறும்
மனிசர்தமிலாகாதார்தீண்டுஞ்சோறும்
இனிமையுடனுதரமில்லாதார்சோறும்
ஈப்புழுநால்மயிருகிர்களிருக்குஞ்சோறும்
முனிவரெனுந்துறவறத்தோரீந்தசோறும்
முனிவர்தங்கள்பாத்திரத்திற்பட்டசோறும்
மனிசரெலிகுக்குடங்கள்காகம்பூனை
வாய்க்கொண்டகறிசோறும்மருவாச்சோறே. 3

அத்திகள்பேரார்க்கிறலிவெண்கத்தாரி
ஆலரசுநறுவிலிபுங்காயிலாரை
புத்திகொல்விகுறிஞ்சிதான்றிகுசும்பைவேளை
புன்முருங்கைமுருங்கைசுகமுளரியுள்ளி
சிற்றவரைகொம்மட்டிபண்ணைதொய்யில்
சிங்காடன்தேறலூவைபனைமயூரன்
சுத்தியில்லாநிலத்திலவைகடம்புகாளான்
சுரைபீர்க்குச்சணந்தின்னர்சுருதியோரே. 4

சிறுகீரைசெவ்வகத்திமுருக்கிரண்டும்
சிறுபசளைபெரும்பசளையம்மணந்தாள்
பறித்தொருவர்கொடாதிருக்கத்தானேசென்று
பாய்ந்தெடுத்துக்கொள்ளுமவைபகிராக்கூறும்
குறித்தாலுந்தின்னுணுக்கைப்புந்துவர்ப்பும்
கூர்க்குமவையழலுமவைகொடும்புளிப்பும்
கறிக்காகாவிவையென்றுகண்டுரைத்தார்
கார்மேனியருளாளர்கடகத்தாரே. 5

மாலமுதுசெய்யாமல்வந்தவெல்லாம்
வருவிருந்தில்வழங்காமல்வைத்தவெல்லாம்
காலமிதுவன்றென்றுகழித்தவெல்லாம்
கடையின்வருங்கறிமுதலகழுவாவெல்லாம்
நூலிசையாவழிகளினல்வந்தவெல்லாம்
நுகராததுடன்பாகஞ்செய்தவெல்லாம்
சீலமிலாச்சிறியோராக்கினவுநல்லோர்
செலமலங்கள்பட்டனவுந்தின்னார்தாமே. 6

தேவர்களுக்கிவையென்றுவைத்தவெல்லாம்
சிவன்முதலாத்தேவர்களுக்கிட்டவெல்லாம்
ஆவிமுதலானவற்றுக்காகாவெல்லாம்
அதுவிதுவென்றறியவரிதானவெல்லாம்
நாவிலிடுவதற்கரிதாயிருப்பவெல்லாம்
நன்றென்றுதம்முள்ளமிசையாவெல்லாம்
ஓவியநாளோவாதபூவுங்காயும்
உத்தமர்களட்டுப்புழுகவார்தாமே. 7

கிளிஞ்சல்முதல்சுட்டனசுண்ணம்புதானும்
கிளர்புனலிலெழுங்குமிழிநுரைகள்தாமும்
விளைந்ததனில்முதல்மாலுக்கீயாவெல்லாம்
விளைந்தநிலமறுகாம்பென்றெழுந்தவெல்லாம்
களைந்தமனத்தார்மற்றுங்கழித்தவெல்லாம்
கடியமுதல்நியமத்தார்கழித்தவெல்லாம்
தெளிந்தபுனல்திருவேங்கடத்துமால்தன்
திருவாணைகடவாதார்தின்னார்தாமே. 8

மோரலதுசாரங்கள்வாங்கிற்றெல்லாம்
முழுப்பகலில்விளங்கனியுந்தானந்தானும்
ஓரிரவிலெள்ளுடனேகூடிற்றெல்லாம்
எள்ளதனிலெண்ணெய்தயிர்தருபண்டங்கள்
ஓர்தவத்தைமந்திரத்தையொழிப்பவெல்லாம்
உண்ணுதநாள்களிலுணந்திப்போதாண்
நாரணனரடிபணியுநல்லோர்நாளும்
நள்ளிரவிலுணுமிவையுண்ணார்தாமே. 9

குளிமுதலானவைசெய்யாதுண்ணுமூணும்
கூட்டல்லாப்பந்தியிலுண்பிறர்கையூணும்
நளிமதிதீவிளக்காகவுண்ணுமூணும்
நள்ளிரவில்விளக்கின்றியுண்ணுமூணும்
கிளிமொழியாளுணநிற்கக்கணவனூணும்
கீழாரைநோக்கூணுமிடக்கையூணும்
ஒளிமறையோர்மற்றுமுகவாதலூணும்
ஒளியரங்கரடிபணிவாருகவார்தாமே. 10

எச்சில்தனில்வார்க்கும்நெய்பிருபாகங்கள்
இரும்பாலுங்கையாலுமிட்டவெல்லாம்
பச்சையல்லாற்கடித்தகுறைபழையஊசல்
பிறரகத்துப்பாகஞ்செய்தெடுத்தவன்னம்
நச்சினவைபழித்தவைமண்ணுற்றந்தீது
நகத்தாலேவிண்டவைதாங்காணுமுப்பும்
பிச்சுளதாமவைகாடிபின்னபாகம்
பிசின்கள்தனிற்சிவந்ததுவும்பிழையூணுமே. 11

தாதைநல்லாசிரியன்முதற்றமையனெச்சில்
தரணிசுரர்சோமத்திலருந்துமெச்சில்
மாதர்கட்குக்கணவனிதமானவெச்சில்
மயிர்புழுநூல்விழுந்தாலும்புனிதம்மண்ணல்
மாதவத்துக்கூவிளங்காய்முகவாசத்து
மாதுளங்காய்மரணம்வரிற்கழித்தவெல்லாம்
ஓதிவைத்தவுண்ணுநாளுகந்தவெட்டும்
உளவென்றுங்கழித்தவற்றில்நன்றுமூணே. 12

மாகரும்பின்சாறுதயிர்பால்நெய்பாக்கு
வளைமிளகுதேனேலம்பனிநீராதி
ஆகரசந்தூய்தாகுமறியாவெல்லாம்
அறியாதார்க்கறியளவுந்தூயவாகும்
சாகரங்கள்தூயனவாமுவாக்கள்கூடில்
சலமெல்லாங்கங்கையாமுபராகத்தில்
மாகரங்கள்பிணமுதலாமணைத்துங்கொண்டு
வருபுனலுந்தூய்தாகும்வேகத்தாலே. 13

தீயாலேநீரொழியவெந்தவெல்லாம்
தீயிடுதலொழிந்திடவேபழுத்தவெல்லாம்
தீயாலுநீராலும்வெந்தவற்றில்
தேறவுலர்நெல்லுமுதலானவெல்லாம்
ஊசாதமாவடகமப்பஞ்சீடை
உரொட்டிமுதலாமவற்றிற்பழையதேனும்
கூசாதேகொண்டிடுமின்புதியதேனும்
கொள்ளேன்மின்தன்னிரதங்குலைந்தக்காலே. 14

தலைப்பயனும்விகாரங்கள்சாகடங்கள்
சக்கரங்கள்தனக்கடைத்தமருந்துதானும்
கலக்கமிலாநன்னீரில்வைத்தசோறும்
கறிமோர்நெய்பால்தயிர்கள்கலந்தசோறும்
விலக்கமிலாமாக்கன்னற்கோதுமத்தால்
விளைவுறவாக்கியநல்விகாரந்தானும்
இலைக்கறிபோலிவையனைத்தும்பழையவேனும்
எந்நாளும்வைத்துண்ண இசைகின்றாரே. 15

தயிர்தன்னில்விகாரங்கள்பூவிற்காயிற்
பழத்தில்வருஞ்சாறூசல்தூயவாகும்
உயிரழியாமைக்குண்ணலூசலுண்ணில்
உறக்கமூவிநெய்தேனிட்டுண்ணலாகும்
பயின்மறைநூலுரையாதபழையவூசல்
பழிப்பிலதாம்நெய்யாலென்றுரைத்தான்சங்கன்
மயிர்முதலானவைபின்னும்பட்டதாகில்
மண்ணீர்மற்றுரைத்தவற்றால்வரங்களாமே. 16

ஒருகுளம்பியிருகன்றியொட்டகப்பால்
உப்புடன்பால்மோருடன்பால்மாதர்தம்பால்
கருவுடையவற்றின்பால்கன்றிலாப்பால்
மறுகன்ருற்கறந்திடும்பால்திரிந்திடும்பால்
திருமகளார்கணவனலாத்தெய்வத்தின்பேர்
சின்னமுடையவற்றின்பால்செம்மறிப்பால்
பரிவதிலந்தணர்விலைப்பால்செம்பினிற்பால்
தீதாம்பாலிவையனைத்தும்பருகாப்பாலே. 17

கங்கையல்லதிரண்டாநாள்வைத்தநீரும்
கால்கழுவிமிகுநீருங்கலங்கல்நீரும்
தெங்கினுளதாய்த்தீயாற்காய்ந்தநீரும்
சிறுகுழிநீர்வழித்தண்ணீர்ப்பந்தனீரும்
சங்கையுடைநீர்வண்ணன்துறையினீரும்
தாரையினுலெச்சிலிதுவென்றநீரும்
சங்குகலமாக்கொண்டுபருகுநீரும்
தரையில்விழாமழைநீருந்தவிரும்நீரே. 18

வெற்றிலைமுன்தின்ருதேதின்னும்பாக்கும்
வெற்றிலையினடிநுனியுநடுவிலீர்க்கும்
வெற்றிலையும்பாக்குமுடன்கூட்டித்தின்னும்
விதவைக்குமுதன்முடிவாச்சிரமத்தார்க்கும்
வெற்றிலையுஞ்சுண்ணும்பினிலையுமற்றும்
விரதங்கொண்டிடுநாள்வெற்றிலையும்பாக்கும்
வெற்றிலைதின்ருநிறகப்பருகுநீரும்
விதையெனவைத்ததுதினலும்விலக்கினரே. 19

சாதிகுணமாச்சிரமந்தேசங்காலம்
தருமங்கள்நிமித்தங்கள்முதலாவோதும்
பேதமுதலாகவொருதிரவியந்தான்
பிரிந்துநலந்தீங்கிணையும்பெற்றுநிற்கும்
பாதமிசைப்பிறந்தோர்க்குக்கபிலையின்பால்
பருகிடலாகாதென்றுமறையோர்சொன்னார்
ஆதலினுலோதியுணர்ந்தவர்பாலெல்லாம்
அடிக்கடியுங்கேட்டயர்வுதீர்மினீரே. 20

கங்கிருளால்விடியாதவுலகுக்கெல்லாம்
கைவிளக்காமிவையென்றுகண்ணன்காட்டும்
பொங்குபுகழாகமங்கள்தெளியச்சொன்ன
பொருளிவைநாம்புண்ணியர்பாற்கேட்டுச்சொன்னோம்
மங்குடலும்பொருளுமல்லதறியாமாந்தர்
வலையுளகப்பட்டுவரம்பழியாதென்றும்
பங்கயமாதுற்றவருளாளர்தம்பால்
பத்திமிகுபவித்திரங்கள்பயின்மினீரே. 21

ஆகாரநியமம் முற்றிற்று

ஸ்ரார்தூப்புல் திருவேங்கடமுடையான்திருவடிகளே சரணம்

ஸ்ரீ தேசிகன் அருளிச்செய்த

# ஸ்ரீ தேசிகப்பிரபந்தம் முற்றிற்று

ஸ்ரீ:

# பிள்ளையந்தாதி

[ஸ்ரீதேசிகன்மீது ஸ்ரீதேசிகன்திருக்குமாரர்
ஸ்ரீநயினாராசாரியர் அருளிச்செய்தது]

சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான்திருவடிகளே சரணம்

தனியன்

ஸ்ரீலக்ஷ்மணயோகீந்த்ர ஸித்தாந்த விஜயத்வஜம் |
விஷ்ணுசித்த குலோத்பூதம் வரதார்யமஹம் பஜே ||

*சீரார் தூப் புற்பிள்ளை யந்தாதி யென்று செழுந்தமிழால்*
*நேராக வேதாந்த தேசிகர் தாளிணைக் கீழ்மொழிந்தான்*
*ஏரார் மறைப்பொரு ளெல்லா மெடுத்திவ் வுலகுயவே*
*சீரா கியவர தாரியன் பாதந் துணைநமக்கே.*

---

*❋ மாமலர்மன்னிய மங்கைமகிழ்ந்துறைமார்பினன்தாள் -*
*தூமலர்சூடியதொல்லருள்மாறன் துணையடிக்கீழ்*
*வாழ்வையுகக்குமிராமானுசமுனிவண்மைபோற்றும்*
*சீர்மையனெங்கள் தூப்புற்பிள்ளைபாதமென்சென்னியதே.* 1

*சென்னிவணங்கச்சிறுபனிசோரவென்கண்ணிணைகள்*
*வெந்நரகங்களும்வீயவியன்கதியின்பமேவத்*
*துன்னுபுகழுடைத்தூப்புல்துரந்தரன் தூமலர்த்தாள்*
*மன்னியநாள்களுமாகுங்கொல்மாநிலத்தீர்!நமக்கே.* 2

*மாநிலத்தோதியமாமறைமன்னியநற்கலைகள்*
*ஆனவைசெப்புமரும்பொருளத்தனையேயருளும்*
*தூநெறிகாட்டுமிராமானுசமுனித்தோத்திரஞ்செய்*
*ஊனமில்தூப்புலம்மானோர்புகழன்றியுய்விலையே.* 3

*உய்யும்வகையிலையுத்தரவேதியுள்வந்துதித்த*
*செய்யவள்மேவியசீரருளாளரைச்சிந்தைசெயும்*
*மெய்யவனெந்தையிராமானுசனருள்மேவிவாழும்*
*ஐயனிலங்குதூப்புற்பிள்ளையாய்ந்தபொருளன்றியே.* 4

அன்றிவ்வுலகினையாக்கியரும்பொருள்நூல்விரித்து
நின்றுதன்னீள்புகழ்வேங்கடமாமலைமேவியும்பின்
வென்றிப்புகழ்த்திருவேங்கடநாதனெனுங்குருவாய்
நின்றுநிகழ்ந்துமண்மேனின்றநோய்கள்தவிர்த்தனனே. 5

வித்தகன்வேதியன்வேதாந்ததேசிகனெங்கள்தூப்புல்
மெய்த்தவனுத்தமன்வேங்கடநாதன்வியன்கலைகள்
மொய்த்திடுநாவின்முழக்கொடுவாதியர்மூலமறக்
கைத்தவனென்றுரைத்தேன்கண்டிலேனென்கடுவினையே. 6

வினைகாள்! உமக்கினிவேறோரிடந்தேடவேண்டும், எனைச் -
சினமேவிமுன்போற்சிதைக்கும்வகையிங்கரிதுகண்டீர்
எனெனிலிராமானுசமுனியின்னுரைசேருந்தூப்புல்
புனிதரென்புந்திபுகுந்துதிகழ்ந்துபொருந்தினரே. 7

பொருந்திப்புவிதனிற்பொய்வாழ்க்கைபூண்கின்றபூரியர்காள்!
இருந்துநரகிலிடர்கெடுமாற்றையறிகின்றிலீர்
பொருந்தும்பொருளொன்றுகேளீர்பொங்குமிவ்விடர்க்கடற்கு
வருந்தாதுதூப்புல்மாபூருடன்பாதம்வணங்குமினே. 8

வணக்கமொடுக்கம்வழக்கமொழுக்கமிரக்கஞ்சேரும்
இணக்கமுறக்கமிழுக்குமழுக்குமிகந்துநிற்கும்
குணக்குலமோங்குமிராமானுசன்குணங்கூறுதூப்புல்
அணுக்கனைப்பிள்ளைதனையரணாகவடைபவர்க்கே. 9

அடைபவர்தீவினைமாற்றியருள்தருந்தூப்புல்ஐய!
இடர்தருமிப்பிறவிக்கடல்தன்னிலமிழ்ந்தவெனைக்
கடையறப்பாசங்கழற்றிநின்தாளிணைகாணும்வண்ணம்
உடையவனே! அருளாய்உணர்ந்தார்தங்கள்கற்பகமே! 10

‘கற்பகமே!’யென்றுகாசினியோரைக்கதிக்கமாட்டேன்
வெற்பிடையேநின்றுவெந்தவத்தியிலும்வேவமாட்டேன்
பற்பல்கலைவலபாவலனே!பத்தரேத்துதூப்புல்
அற்புதனே!அருளாயடியேனுக்கரும்பொருளே. 11

பொருளானதொன்றுமென்னிற்பொருந்தாததுமன்றியந்தோ!
மருளேமிகுத்துமறையவர்நல்வழிமாற்றிநின்றேன்
தெருளார்மறைமுடித்தேசிகனே!எங்கள்தூப்புல்தேவே !
அருளாயினியெனக்குன்னருளேயன்றியாறிலையே. 12

ஆறுகவெண்ணும்அருங்கருமம்ஞானங்காதல்கொண்டு
வேறுகநிற்கும்விரகெனக்கில்லைவிரத்தியிலை
தேறுதுதிண்மதிசீரார்கதியிலுஞ்செம்பொன்மேனி
மாறுததூப்புல்மாலே!மறவேனினிநின்பதமே. 13

நின்பதந்தன்னிலும்நேரேயெனக்கிலையன்புகண்டாய்
நின்பதமொன்றியவன்பரிலும்நேசமில்லையந்தோ !
என்படிகண்டினியென்பயன்?ஏதமில்தூப்புலெந்தாய்!
உன்படியேயருளால்உதவாயெனக்குன்னருளே. 14

உன்னருளன்றியெனக்கொருநற்றுணையின்மையினால்
என்னிருவல்வினைநீயேவிலக்கியிதங்கருதி
மன்னியநற்றிருமந்திரமோதும்பொருணிலையே
பொன்னருளாலருளாய்புகழ்தூப்புற்குலவிளக்கே! 15

விளக்காகிவேங்கடவெற்பினில்வாழும்விரைமலராள்
வளக்காதல்கொண்டுறைமார்பன்திறத்துமுனதடியார்
துளக்காதலில்லவர்தங்கள்திறத்திலுந்தூய்மையெண்ணிக்
களக்காதல்செய்யுநிலைகடியாய்தூப்புற்காவலனே! 16

❋ காவலனெங்கள்கடாம்பிக்குலபதியப்புளார்தம்
தேமலர்ச்சேவடிசேர்ந்துபணிந்தவர்தம்மருளால்
நாவலருந்தென்வடமொழிநற்பொருள்பெற்றநம்பி!
காவல! தூப்புற்குலத்தரசே! எமைக்காத்தருளே. 17

❋ அருள்தரும்ஆரணதேசிகனே! எங்கள்தூப்புல்தேவே!
வருகவிதார்க்கிகசிங்கமே! வாதியர்வாழ்வறுத்தாய்!
இருகையுங்கூப்பியுரைக்குமிவ்விண்ணப்பமொன்றுகேளாய்
உருவவெனக்கருளாய்எண்ணுமுள்ளமுன்தொண்டரையே.

❋ தொண்டருகக்குந்துணையடிவாழிநின்தூமுறுவல்
கொண்டமுகம்வாழிவாழிவியாக்கியாமுத்திரைக்கை
வண்டிருநாமமும்வாழிமணிவடமுப்புரிநூல்
கொண்டசீர்த்தூப்புற்குலமணியே! வாழிநின்வடிவே. 19

❋ வடிவழகார்ந்தவண்டுப்புல்வள்ளல்மென்மலரடிமேல்
அடியவரோதவந்தாதியிருபதுமாய்ந்துரைத்தேன்
திடமுடனீதைத்தினந்தொறுமாதரித்தோதுமன்பர்
முடியிடைநேர்படுந்தூப்புலம்மான்பதமாமலரே. 20

[மாமலர்மன்னியமங்கைமகிழ்ந்துறைமார்பினன்தாள் -
தூமலர்சூடியதொல்லருள்மாறன்துணையடிக்கீழ்
வாழ்வையுகக்குமிராமானுசமுனிவண்மைபோற்றும்
சீர்மையனெங்கள்தூப்புற்பிள்ளைபாதமென்சென்னியதே.]

பிள்ளையந்தாதி முற்றிற்று

சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான்திருவடிகளே சரணம்

ஸ்ரீ:

# சாத்துமுறை

---

ஸர்வதேசதசாகாலேஷ்வவ்யாஹதபராக்ரமா |
ராமாநுஜார்யதிவ்யாஜ்ஞா வர்த்ததாமபிவர்த்ததாம் ||

ராமாநுஜார்யதிவ்யாஜ்ஞா ப்ரதிவாஸரமுஜ்ஜ்வலா |
திகந்தவ்யாபிநீ பூயாத் ஸா ஹி லோகஹிதைஷிணீ ||

ஸ்ரீமந்! ஸ்ரீரங்கஸ்ரியமநுபத்ரவாமநுதிநம் ஸம்வர்த்தய ||
ஸ்ரீமந்! ஸ்ரீரங்கஸ்ரியமநுபத்ரவாமநுதிநம் ஸம்வர்த்தய ||

நமோ ராமாநுஜார்யாய வேதாந்தார்த்தப்ரதாயிநே |
ஆத்ரேயபத்மநாபார்யஸுதாய குணஶாலிநே ||

ராமாநுஜதயாபாத்ரம் ஜ்ஞாநவைராக்யபூஷணம் |
ஸ்ரீமத்வேங்கடநாதார்யம் வந்தே வேதாந்ததேஸிகம் ||

வாழி யிராமா னுசப்பிள்ளான் மாதகவால்
வாழு மணிநிக மாந்தகுரு—வாழியவன்
மாறன் மறையுமிரா மானுசன் பாடியமும்
தேறும் படியுரைக்குஞ் சீர்.

வஞ்சப் பரசமயம் மாற்றவந்தோன் வாழியே
மன்னுபுகழ்ப் பூதூரான் மனமுகப்போன் வாழியே
கஞ்சத் திருமங்கை யுகக்கவந்தோன் வாழியே
கலியனுரை குடிகொண்ட கருத்துடையோன் வாழியே
செஞ்சொல் தமிழ்மறைகள் தெளிந்துரைப்போன் வாழியே
திருமலைமால் திருமணியாய்ச் சிறக்கவந்தோன் வாழியே
தஞ்சப் பரகதியைத் தந்தருள்வோன் வாழியே
தண்டமிழ்த்தூப் புல்திருவேங் கடவன்றான் வாழியே.

நானிலமுந் தான்வாழ நான்மறைகள் தாம்வாழ
மாநகரின் மாறன் மறைவாழ—ஞானியர்கள்
சென்னியணி சேர்தூப்புல் வேதாந்த தேசிகனே !
இன்னுமொரு நூற்றாண் டிரும்.

வாழியணி தூப்புல் வருநிகமாந் தாசிரியன்
வாழியவன் பாதார விந்தமலர்—வாழியவன்
கோதிலாத் தாண்மலரைக் கொண்டாடிக் கொண்டிருக்கும்
தீதிலா நல்லோர் திரள்.

---



## திருநாட்பாட்டு

வாதா சனவர ரிவரென வருமா பாடியம் வகைபெறுநாள்
வகுளா பரணப் பெருமாள் தமிழின் வாசி யறிந்திடுநாள்
பேதா பேதம் பிரம மெனுவகை பிரமந் தெளிவுறுநாள்
பேச்சொன் றுக்குச் சததூ டணியைப் பேசிய தேசிகனுள்
தீதா கியபல மாயக் கலியைச் சிக்கென வென்றிடுநாள்
திக்கெட் டும்புகழ் சீபா டியத்தைத் தெளிய வுரைத்திடுநாள்
ஓதா தோதும் வேதாந் தாரிய னுதயஞ் செய்திடுநாள்
உத்தம மான புரட்டா சித்திரு வோண மெனும்நாளே.

𑌶𑍍𑌰𑍀𑌃

𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍇 𑌨𑌿𑌗𑌮𑌾𑌨𑍍𑌤𑌮𑌹𑌾𑌦𑍇𑌶𑌿𑌕𑌾𑌯 𑌨𑌮𑌃

𑌶𑍍𑌰𑍀𑌨𑍈𑌨𑌾𑌰𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌵𑌿𑌰𑌚𑌿𑌤𑌮𑍍

**𑌶𑍍𑌰𑍀𑌮𑌨𑍍𑌨𑌿𑌗𑌮𑌾𑌨𑍍𑌤𑌮𑌹𑌾𑌦𑍇𑌶𑌿𑌕𑌮𑌙𑍍𑌗𑌲𑌾𑌶𑌾𑌸𑌨𑌮𑍍**

---

𑌶𑍍𑌰𑍀𑌮𑌾𑌨𑍍 𑌵𑍇𑌙𑍍𑌕𑌟𑌨𑌾𑌥𑌾𑌰𑍍𑌯𑌃 𑌕𑌵𑌿𑌤𑌾𑌰𑍍𑌕𑌿𑌕𑌕𑍇𑌸𑌰𑍀 ।
𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌵𑌰𑍍𑌯𑍋 𑌮𑍇 𑌸𑌨𑍍𑌨𑌿𑌧𑌤𑍍𑌤𑌾𑌂 𑌸𑌦𑌾 𑌹𑍃𑌦𑌿 ॥

𑌶𑍍𑌰𑍀𑌮𑌲𑍍𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑌣𑌯𑍋𑌗𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌨𑍍𑌤𑌵𑌿𑌜𑌯𑌧𑍍𑌵𑌜𑌮𑍍 ।
𑌵𑌿𑌶𑍍𑌵𑌾𑌮𑌿𑌤𑍍𑌰𑌕𑍁𑌲𑍋𑌦𑍍𑌭𑍂𑌤𑌂 𑌵𑌰𑌦𑌾𑌰𑍍𑌯𑌮𑌹𑌂 𑌭𑌜𑍇 ॥

---

**𑌸𑌰𑍍𑌵𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑌸𑍍𑌵𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑌾𑌯 𑌸𑌿𑌂𑌹𑌾𑌯 𑌕𑌵𑌿𑌵𑌾𑌦𑌿𑌨𑌾𑌮𑍍 ।
𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌵𑌰𑍍𑌯𑌾𑌯 𑌵𑍇𑌂𑌕𑌟𑍇𑌶𑌾𑌯 𑌮𑌙𑍍𑌗𑌲𑌮𑍍 ॥** 1

**𑌨𑌭𑌸𑍍𑌯𑌮𑌾𑌸𑌿 𑌶𑍍𑌰𑍋𑌣𑌾𑌯𑌾𑌮𑌵𑌤𑍀𑌰𑍍𑌣𑌾𑌯 𑌸𑍂𑌰𑌯𑍇 ।
𑌵𑌿𑌶𑍍𑌵𑌾𑌮𑌿𑌤𑍍𑌰𑌾𑌨𑍍𑌵𑌯𑌾𑌯𑌾𑌸𑍍𑌤𑍁 𑌵𑍇𑌂𑌕𑌟𑍇𑌶𑌾𑌯 𑌮𑌙𑍍𑌗𑌲𑌮𑍍 ॥** 2

**𑌪𑌿𑌤𑌾 𑌯𑌸𑍍𑌯𑌾𑌨𑌨𑍍𑌤𑌸𑍂𑌰𑌿𑌃 𑌪𑍁𑌣𑍍𑌡𑌰𑍀𑌕𑌾𑌕𑍍𑌷𑌯𑌜𑍍𑌵𑌨𑌃 ।
𑌪𑍌𑌤𑍍𑌰𑍋 𑌯𑌸𑍍𑌤𑌨𑌯𑌸𑍍𑌤𑍋𑌤𑌾𑌰𑌮𑍍𑌬𑌾𑌯𑌾𑌸𑍍𑌤𑌸𑍍𑌯 𑌮𑌙𑍍𑌗𑌲𑌮𑍍 ॥** 3

**𑌵𑍇𑌂𑌕𑌟𑍇𑌶𑌾𑌵𑌤𑌾𑌰𑍋𑌽𑌯𑌂 𑌤𑌦𑍍𑌘𑌣𑍍𑌟𑌾𑌂𑌶𑍋𑌽𑌥𑌵𑌾 𑌭𑌵𑍇𑌤𑍍 ।
𑌯𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌂𑌶𑍋𑌽𑌥𑌵𑍇𑌤𑍍𑌯𑍇𑌵𑌂 𑌵𑌿𑌤𑌰𑍍𑌕𑍍𑌯𑌾𑌯𑌾𑌸𑍍𑌤𑍁 𑌮𑌙𑍍𑌗𑌲𑌮𑍍 ॥** 4

**𑌶𑍍𑌰𑍀𑌭𑌾𑌷𑍍𑌯𑌕𑌾𑌰𑌃 𑌪𑌨𑍍𑌥𑌾𑌨𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌾 𑌦𑌰𑍍𑌶𑌿𑌤𑌂 𑌪𑍁𑌨𑌃 ।
𑌉𑌦𑍍𑌧𑌰𑍍𑌤𑍁𑌮𑌾𑌗𑌤𑍋 𑌨𑍂𑌨𑌮𑌿𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌯𑌾𑌸𑍍𑌤𑍁 𑌮𑌙𑍍𑌗𑌲𑌮𑍍 ॥** 5

**𑌯𑍋 𑌬𑌾𑌲𑍍𑌯𑍇 𑌵𑌰𑌦𑌾𑌰𑍍𑌯𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌸𑍍𑌯 𑌪𑌰𑌾𑌂 𑌦𑌯𑌾𑌮𑍍 ।
𑌅𑌵𑌾𑌪𑍍𑌯 𑌵𑍃𑌦𑍍𑌧𑌿𑌂 𑌗𑌮𑌿𑌤𑌸𑍍𑌤𑌸𑍍𑌮𑍈 𑌯𑍋𑌗𑍍𑌯𑌾𑌯 𑌮𑌙𑍍𑌗𑌲𑌮𑍍 ॥** 6

ராமாநுஜார்யாதாத்ரேயாந் மாதுலாத் ஸகலா: கலா: |
அவாப விம்ஶத்யப்தே யஸ்தஸ்மை ப்ராஜ்ஞாய மங்களம் || 7

ஶ்ருதப்ரகாஶிகா பூமௌ யேநாதௌ பரிரக்ஷிதா |
ப்ரவர்த்திதா ச பாத்ரேஷு தஸ்மை ஶ்ரேஷ்டாய மங்களம் || 8

ஸாம்ஸ்க்ருதீபிர் த்ராமிடீபிர் பஹ்வீபி: க்ருதிபிர் ஜநாந் |
யஸ்ஸமுஜ்ஜீவயாமாஸ தஸ்மை ஸேவ்யாய மங்களம் || 9

ய: க்யாதிலாபபூஜாஸு விமுகோ, வைஷ்ணவே ஜநே
க்ரயணீயதஶாம் ப்ராப்தஸ்தஸ்மை பவ்யாய மங்களம் || 10

யஸ்மாதேவ மயா ஸர்வம் ஶாஸ்த்ரமக்ராஹி நாந்யத: |
தஸ்மை வேங்கடநாதாய மம நாதாய மங்களம் || 11

பித்ரே ப்ரஹ்மோபதேஷ்ட்ரே மே குரவே தைவதாய ச |
ப்ராப்யாய ப்ராபகாயாஸ்து வேங்கடேஶாய மங்களம் || 12

ய: க்ருதம் வரதார்யேண வேதாந்தாசார்யமங்களம் |
ஆஶாஸ்தேநுதிநம் ஸோபி பவேந்மங்களபாஜநம் || 13

---

கவிதார்க்கிகஸிம்ஹாய கல்யாணகுணஶாலிநே |
ஸ்ரீமதே வேங்கடேஶாய வேதாந்தகுரவே நம: ||

வாதித்விபஶிரோபங்கபஞ்சாநநபராக்ரம: |
ஸ்ரீமாந்வேங்கடநாதார்யஶ்சிரம் விஜயதாம் புவி ||

ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேஶிகாய நம:

ஸ்ரீ:

# ஸ்ரீ தேசிகப்பிரபந்தம் செய்யுளகராதி